உ
சிவமயம்
பீஜாக்ஷர யந்திரங்கள் அடங்கிய

# சர்வ தேவதா வசியம்

(முதற்பாகம்)

## காப்பு வெண்பா

ஆவதானம்போல அற்புதமாய்ச் செய்சர்வ
தேவதா வஸ்யமதைச் செப்பவே—பூவதால்
அர்ச்சிக்க வைங்கரனை இப்பொன் மலர்ச்சிலம்பு
கர்ச்சிக்கத் தமபதங் காப்பாம்.

## சாரதாம்பாள் துதி

சாமாதி நான்கினையுஞ் சாரதாம்பாளருளால்
நாமாதியந்தமே நன்குணர—பாமாது
எத்தினமு மென்னாவி லியாவுமுரைப்பதற்குப்
பக்தியுடன் பணிகுவாம்.

## சற்குரு ஸ்துதி

மூலமுதற்காரணமாய் முன்னின்று வெப்பொருட்கும்
நூலதனிற சாரமதை நுழைத்திட்ட—மேலறிவோன்
பற்பலவாய்ப் பரவத்தார் பதித குருசுவாமிபதம்
அற்புதமாய் நிதம்பணிகுவாம்

## அவையடக்கம்

புல்லறிவோன் செம்பொருளைப் புண்ணியாகளு நோக்குங்கால்
நல்லறிவோ செக்குற்ற கவிலாது—தொல் வுலகில்
பாவலர்க ளெஞ்ஞான்றும் நாட்டாதிழுக்குகளைப்
பாவலர்கள் மன்னிப்பார் பார்.

## ஆக்கியோன் பெயர்

நத்திட விஸ்வராயன கோத்திரத்தினில்
சத்ததாய் வீராசாமி தவத்துதி
வந்ததென செழுமணவைச சித்திரக்கவி
சித்ததாய்த் தேவேந்திரநாதன் செய்ததே.

## கணேசர் ஸ்தோத்தீயம்

உம்பர்கள் சிகாரத்ரம் உமாமயேஸ்வரபுத்ரம்
கம்பமால் களிஙஜரம் கநகாம்பர விசித்ரம்
அகண்டிதகா த்ரம் அருள்பொழி நேத்ரம்
மாதவர்பூஜிதம் வந்தேகஜாநநம்பஜே.

---

## கணநாதர் உபாசனு விதி

பிராதக்காலத்தி லெழுந்திருந்து ஸ்நானபானஞ் செய்து பட்டு வஸ்திரம் அல்லது நார்மடி அரையிலு டுத்தி விபூதி யணிந்து அனுஷ்டான முதலியதை மூடித்து பரிசுத்தமான விடத்தில் தன்னந்தனியனுய் வீற்றிருந்து யாதொரு சிந்தனுவஸ்தையுமின்றி அடி யிற் கூறியவாறு தியானஞ்செய்து சக்கரமெழுதிபூஜை யில் வைத்து தூபதீபங்கொடுத்து மூலமந்திரத்தை ஜெபிக்கவும்.

## விக்கினேஸ்வரர் மந்திரம்

ஓங் றீம் அங் உங் சிங் கணதேவாயநம, சகல துரித்பூத வாதைகளும் நசிம்சி உரு 1008-ஜெபிக்கவும் சித்தியாம்.

## இதற்கு சக்கரம்



## முதற் பாகம்

ஒரு வெற்றிலையில் அல்லது உள்ளங்கையில் விபூதி பரப்பி அதில் இச்சக்கரத்தை ஐங்கோணமாய்க் கீறி அதிற்பீஜாக்ஷரங்களை வரைந்து அதைச்சுற்றிலும் ஓங்காரத்தைப்போட்டு மூலமந்திரஞ் ஜெபிக்க சகல காரியங்களுஞ் ஜெயமாம். பல நோய்களும் அகலும்.

## பூஜை விவரம்

செம்பு அல்லது மண் கலத்தில் சுத்தமானஜலம் சுத்தியாய் மொண்டுவந்து அதில் மாவிலைக்கொத்து போட்டு கும்ப வஸ்திரங்கட்டி மஞ்சள் குங்குமம் அக்ஷதை புஷ்பஞ்சாத்தி அதன்முன் வாழையிலை போட்டு அதில் தாம்பூல பழம் தேங்காய் புஷ்பம் சந்தனம் பரமான்னம் வைத்து கூடன் சாம்பிராணி முதலிய தூபதீபங்கொடுத்து செய்யவேண்டியது.

## கணபதி மூலமந்திரம்

ஓம் நமோ பகவதே ஐயும் கிலியும் சவ்வும் கணபதி வசிவசி சுவாகாவென்று உரு 1008-ஜெபிக்கவும் சித்தியாம்.

## இதின் பலன்

குழந்தைகளுக்கும் பெரியவர்களுக்கும் சேர்ந்த பயம், காத்து, கருப்பு, சோகம், மந்தம் முதலியவைகளால் உண்டாகும் சுரம், பலதோஷங்கள், சிரசிலுண்டாகும் செவ்வாப்பு கட்டிகள், தெற்கத்தி நோய், இழுப்பு வலிப்பு, முதலியவைகளுக்கு மேற்படி கணேசரைப் பூஜைசெய்து 108 உருவரையில் ஜெபித்து கும்ப தீர்த்தம் மூன்றுதரம் கொஞ்சம் அருந்தக் கொடுத்து விபூதி பூசிக்கொண்டுவரவும் சகல வினைகளும் பறந்து சௌக்கியப்படும்.

---

## வேறு விக்கினேஸ்வரர் மந்திரம்

உதயகாலத்திலெழுந்து நதியிற்சென்று ஸ்நானஞ் செய்து அரையில் பட்டுவஸ்திரங்கட்டி விபூதி தரித்து அநுஷ்டானஞ்செய்து சுத்தமான இடத்தில் மாம்பலகைபோட்டுத் தனியாகக் கிழக்குமுகமாய் அதன்பேரிற் குந்தி தங்கத்தகட்டிற் சக்கரமெழுதி தூபதீபங் காட்டி மூலமந்திரம் ஜெபிக்கவும்.

## சர்வ தேவதா வசியம்

### தியானம்

லம்பே ஈரா ஸ ோகர்கர்ணே ஹரிபிர்ம்மவி துதித்த மகாகிரகபதிகாமி, சோம சூரியாக்னிலோசனுய் குரு நில்துணைக்கு சந்ததம்.

### இதற்குச் சக்கரம்



### மூலமந்திரம்

ஓம் நமோ தசாக்ஷர மந்திராய மூஷிகவாகனுய ஐயும் கிலியும் செளவும் ஆ-ஊ-மகாகணபதி எனக்கு வசமாக சுவாகா உரு 1008-ஜெபிக்க சித்தியாம்.

### பூஜை விவரம்

தீபமேற்றி கிழக்குமுகமாகவைத்து அதன்முன் தலைவாழையிலை போட்டு பச்சரிசி பரப்பி அதின்மேல் கும்பம்வைத்து கும்பத்தில் மஞ்சள் நூல் சுற்றிக் கும்பத்திற்குள் ஜலம்வார்த்துத் தேங்காய் பழம் தாம்பூலம் ஊதுவத்தி அவல்கடலை முதலானவை வைத்துசூடன் கொளுத்திப் பூசைசெய்யவும்.

இந்த சாஸ்திரத்திற் சொல்லுகிற எத்தொழிலுக்கும் முதலில் இந்த விநாயகர் மூலமந்திரத்தை 108-தரம் ஜெபம் செய்த பிற்பாடு மற்ற தொழில்களைச் செய்ய சித்தியாம். அப்படி செய்யாவிடின் யாவுங் கெடும் பலிதமிராது.

## விநாயகர் பூஜாவிதி

சுக்லாம்-பரதரம்-விஷ்ணும்-சசிவர்ணம்-சதுர்ப்புஜம்
பிரஸந்நவதனம்-த்யாயேத்-ஸர்வவிக்நோப-சாந்தயே.

## பிராணயாமம்

ஆஸநேவினியோக, ஆசனந்நம, பூம்பாதி, ஊர்த்துவ லோகஸ்ய உபர்யஸ்து திவாகர, தசப்ரணவ, ஸம்யுக்தம், த்ரிர்ப்பிர்த்தி, புந, புந, அங்குள்யக்ரை, நாசிகாக்ரம், ஸம்பீட்டியாம், ருஷியி, பரிகல்பிதம்.

## சங்கல்பம்

சுபேம்யாம், சோபனே முகூர்த்தே, ஆத்யப்ரஹ்மண, துவிதீயபரார்த்தே, ஸ்வேதவராஹகல்பே, வைவஸ்வத மநுவந்தரே, கலியுகே, ப்ரதமபாதே, ஜம்புத்வீபே, பாரதவர்ஷே, பரதக்கண்டே, அஸ்மின், வர்த்தமான, வ்யவஹாரி, சாந்த்ர ஸௌரமானேன், ப்ரபவாதி ஷஷ்டி ஸம்வத்ஸாரணும் மத்யே, (விஜய) நாம ஸம்வத்ஸரே, (தக்ஷிணாயனே.) (வருஷ) ருதௌ, (பாத்ரபத) மாஸே, (சுக்ல) பக்ஷே, சதுர்த்தியாம், (சுக்கிர) வாரயுக்தாயாம், (சித்திர) நக்ஷத்திர யுக்தாயாம், சுபநக்ஷத்திர, சுபயோக, சுபகரண, ஏவங்குண, விசேக்ஷண விசிஷ்டாயாம் சுபதிதௌ, [மம] அஸ்மாகம், ஸஹகுடும்பானாம், க்ஷேமஸ்தைர்ய விஜய ஆயுராரோக்ய ஐஸ்வர்யாபி விருத்யர்த்தம், தர்மாத்த காம்ய மோக்ஷ சதுர்விதபல புருஷார்த்த சித்யர்த்தம், இஷ்ட காம்யார்த்த சித்யர்த்தம் *வருஷே வருஷே பிரயுக்த வரசித்தி விநாயக ப்ரீத்யர்த்தம், யாவச்சக்திய தியான மாவாஹனாதி சமஸ்த ஷோடசோபசார பூஜாஞ்ச கரிஷ்யே நம:

---

( ) இக்குறிகள் அடங்கிய வருஷம், அயனம், ருது, மாசம், பக்ஷம், திதி, வாரம், நக்ஷத்திரம் ஆகிய இவைகளைப் பூஜை நாட்களிற்கு ஏற்க மாற்றிக்கொள்ளவும்.

[] 'மம' என்னும் சொல்லை பிரம்மாசாரியும் 'அஸ்மாகம்' என்னுஞ் சொல்லை கிருகஸ்தனும் உபயோகப் படுத்தல் வேண்டும்.

* நித்திய பூஜையில் 'வருஷே வருஷே பிரயுக்த வரசித்தி விநாயக மூர்த்தியஸ்ய' என்பதை நீக்கிப் பூசிக்கவும்.

## கலஸ பூஜை

ததங்கம் கசம பூஜாஞ்ச கரிஷ்யேநம: கலஸ் கந்தம் ஸமர்ப்பயாமி, புஷ்பம் ஸமர்ப்பயாமி, அக்ஷதான் ஸமர்ப்பயாமி.

கங்கேச யமுனே சைவ கோதாவரி ஸரஸ்வதி நர்மதே ஸிந்துகாவேரி ஜலேஸ்மின் ஸந்நிதம்குரு. கலஸோதகேன பூஜா த்ரவ்யாணி தேவமாத்மானஞ்ச ப்ரோக்ஷிய.

மகா கணதிபதயேநம: த்யாயாமி, ஆவாஹயாமி, ஆஸனம் ஸமர்ப்பயாமி, ஹஸ்தயோ: அர்க்யம் ஸமர்ப்பயாமி, பாதயோ: பாத்யம் ஸமர்ப்பயாமி, ஸ்நானம் ஸமர்ப்பயாமி, ஸ்நானனந்தரம் ஆசமனீயம் ஸகர்ப்பயாமி, வஸ்த்ரார்த்தம் அக்ஷதான் ஸமர்ப்பயாமி, யக்ஞோப வீதார்த்தம் அக்ஷதாம் ஸமர்ப்பயாமி, கந்தம் ஸமர்ப்பயாமி. அலங்கரணர்த்தம் அக்ஷதான் ஸமர்ப்பயாமி, கந்தஸ்யோ பரிபுஷபாணி பூஜையாமி.

## ஸ்லோகம்

மூஷிக வாஹன மோதக ஹஸ்த
சாமர கர்ண விளம்பித சூஸ்திர
வாமன ரூப மகேஸ்வர புத்ர
விக்ந விநாயக பாத நமஸ்தே.

## சோடச கர்ம நாமங்கள்

ஓம் சுமுகாய நம: ஓம் ஏகதந்தாய நம: ஓம் கபிலாய நம: ஓம் கஜகர்ணகாய நம: ஓம் லம்போதராய நம: ஓம் விகடாயநம: ஓம் விக்நராஜாய நம: ஓம் விநாயகாயநம: ஓம் தூமகேதுவேநம: ஓம் கணத்யக்ஷாய நம: ஓம் பாலசந்த்ராயநம: ஓம் வக்ரதுண்டாயநம: ஓம் வக்ரதுண்டாயநம: ஓம் சூர்ப்பகர்ணயநம: ஓம் ஹேரம்பாயநம: ஓம் ஸ்கந்தபூர்வஜாய நம: ஓம் மஹாகணதிபதியே நம: நாநாவித பத்ராணி புஷ்பாணி ஸமர்ப்பயாமி, தூபம் ஆக்கிராபயாமி, தீபம் தர்ஸயாமி.

## விநாயகர் அகவல்

சீதக்களபச் செந்தாமரைப்பூம்
பாதச்சிலம்பு பலஇசைபாடப்
பொன்னரைஞாணும் பூந்துகிலாடையும்
வன்னமருங்கில் வளர்ந்தழகெறிப்பப்
பேழைவயிறும் பெரும்பாரக்கோடும்
வேழமுகமும் விளங்குசிந்தூரமும்
ஐந்துகரமும் அங்குசபாசமும்
நெஞ்சிற்குடிகொண்ட நீலமேனியும்
நான்றவாயும் நாலிருபுயமும்
மூன்றுகண்ணும் மும்மதச்சுவடும்
இரண்டுசெவியும் இலங்குபொன்முடியும்
திரண்டமுப்புரிநூல் திகழொளிமார்பும்
சொற்பதங்கடந்த துரியமெய்ஞ்ஞான
அற்புதநின்ற கற்பகக்களிறே
முப்பழநுகரும் மூஷிகவாகன
இப்பொழுதென்னை யாட்கொளவேண்டித்
தாயாயெனக்குத் தானெழுந்தருளி
மாயாப்பிறவி மயக்கமறுத்துத்
திருந்தியமுதலைந் தெழுத்துந்தெளிவாய்
பொருந்தவேவந்தெ னுளந்தனிற்புகுந்து
குருவடிவாகிக் குவலயந்தன்னில்
திருவடிவைத்துத் திறமிதுபொருளென
வாடாவகைதான் மகிழ்ந்தெனக்கருளி
கோடாயுதத்தாற் கொடுவினைகளைந்தே
உவட்டாவுபதேசம் புகட்டியென்செவியில்
தெவிட்டாதஞானத் தெளிவையுங்காட்டி
ஐம்புலன்றன்னை யடக்குமுபாயம்
இன்புறுகருணை இனிதெனக்கருளிக்
கருவிகளொடுங்குங் கருத்தினையறிவித்
திருவினைதன்னை யறுத்திருள்கடிந்து
தலமொருநான்குந் தந்தெனக்கருளி
மலமொருமூன்றின் மயக்கமறுத்தே
ஒன்பதுவாயில் ஒருமந்திரத்தால்

ஐம்புலக்கதவை யடைப்பதுங்காட்டி
ஆறுதாரத் தங்குசநிலையும்
பேருநிறுத்திப் பேச்சுரையறுத்தே
இடையிங்கலையி லெழுத்தறிவித்துக்
கடையிற்சுழிமுனைக் கபாலமுங்காட்டி
மூன்றுமண்டலத்தின் முட்டியதூணின்
நான்றெழுபாம்பின் நவிலுணர்த்திக்
குண்டலியதனிற் கூடியவசபை
விண்டெழுமந்திரம் வெளிப்படவுரைத்து
மூலாதாரத்தின் மூண்டெழுகனலைக்
காலாலெழுப்புங் கருத்தறிவித்தே
அமுதநிலையும் ஆதித்தனியக்கமும்
குமுதசகாயன் குணத்தையுங்கூறி
இடைச்சக்கரத்தின் ஈரெட்டுநிலையும்
உடற்சக்கரத்தின் உறுப்பையுங்காட்டி
சண்முகதூ முஞ் சதுர்முகசூட்சமும்
எண்முகமாக வினிதெனக்கருளிப்
புரியட்டகாயம் புலப்படவெனக்குத்
தெரியெட்டுநிலையுந் தெரிசனப்படுத்திக்
கருத்தினிற்கபால வாயிற்காட்டி
இருத்திமுத்தி யினிதெனக்கருளி
என்னையறிவித் தெனக்கருள்செய்து
முன்னைவினையின் முதலைக்களைந்து
வாக்குமனமும் இல்லாமனோலயம்
தேக்கியேயென்றன் சிந்தைதெளிவித்
திருள்வெளியிரண்டுக் கொன்றிடமென்ன
அருள்தரும்ஆனந்தத் தழுத்தியென்செவியில்
எல்லையில்லா வானந்தமளித்து
அல்லல்களைந்தே யருள்வழிகாட்டிச்
சத்தத்தினுள்ளே சதாசிவங்காட்டி
சித்தத்தினுள்ளே சிவலிங்கங்காட்டி
அணுவிற்கணுவாய் அப்பாலுக்கப்பாலாய்க்
கணுமுற்றிநின்ற கரும்புள்ளேகாட்டி
வேடமுநீறும் விளங்கநிறுத்திக்

கூடுமெய்த்தொண்டர் குழாத்துடன் கூட்டி
அஞ்சக்கரத்தின் அரும்பொருடன்னை
நெஞ்சக்கரத்தி னிலையறிவித்துத்
தத்துவநிலையைத் தந்தெனையாண்ட
வித்தகவிநாயக விரைகழல்சரணே,

விநாயகர் அகவல் முற்றிற்று.

---

## விநாயகர் கவசம்

---

ஆதியில் இதனடியிற் கூறப்படும் இச்சக்கரத்தைக் காசிப முனிவர் மூற்கல முனிவருக்கு அருளிச்செய்ய அவர் மாண்டவ்ய முனிவருக்கு அநுக்கிரகிக்க, அவர் மரீசி முனிவருக்கு உபதேசித்தருள, அவர் பவனமுனிவருக்குத் திருவாய் மலர்ந்தருளிச் செய்தனரென்றறிக.

இதை நித்திய கருமங்களை முடித்துப் பரிசுத்தமாகிய ஓரிடத்தில் இருந்துகொண்டு ஒன்றுபட்ட மனத்துடனே விநாயகரைத் தியானித்து இதைச் ஜெபிக்க வேண்டும்.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

வளர்சிகையைப்பராபரமாய் வயங்குவிநாயகர்காக்க
வாய்ந்தசென்னி
யளருபடாவதிகசவுந் தாதேகமதோற்கடர்தா
மமர்ந்துகாக்க
விளவநெற்றியையென்னும் விளங்கிய காசிபர்காக்க
புருவந்தம்மைத்
தளர்வின்மகோதரர்காக்க தடவிழிகள்பாலசந்
திரனார்காக்க. 1

கவின்வளருமதரங்கச முகர்காக்கதாலங்கணக்
கிரீடர்காக்க
நாவில்சிவிகங்கிரிரைசுமுசுதர் காக்கநனிவாக்கை
விநாயகர்தாம் காக்க

அவிர்நகைதுன்முகர் காக்க வள்ளெழிற்செஞ்செவிபாச
பாணிகாக்க
தவிர்தலுறுதிளங்கொடிபோல் வளர்மணிநாசியைச்சிந்தி
தார்த்தர்காக்க. 2

காமருபூமுகந்தன்னைக் குணேசர் நனிகாக்ககளங்
கணேசர்காக்க
வாமமுறுமிருதோளும் வயங்குகந்தபூர்வசர்தா
மகிழ்ந்துகாக்க
ஏமமுறுமணிமுலைவிக் கினவினுசன்காக்க
விதயந்தன்னைத்
தோமகலுங்கணநாதர் காக்கவகட்டினைத்துலங்கே
ரம்பர்காக்க. 3

பக்கமிரண்டையுந்தரா தரர்காக்கபிருட்டத்தைப்
பாவநீக்கும்
விக்கினகரன்காக்க விளங்கிலிங்கம்வியாளபூ
டணர்தாங்காக்க
தக்ககுய்யந்தன்னைவக் கிரதுண்டர்காக்கசக
னத்தையல்லல்
உக்ககணபன்காக்க வூருவைமங்களமூர்த்தி
யுவந்துகாக்க. 4

தாழ்முழந்தாண்மகாபுத்தி காக்கவிருபதமேக
தந்தர்காக்க
வாழ்கரங்கப்பிரப்பிரசா தனர்காக்கமுன்கையை
வணங்குவார்நோய்
ஆழ்தரச்செய்யாசாபூ ரகர்காக்கவிரல்பதும
வத்தர்காக்க
கேழ்கிளருநகங்கள்விநா யகர்காக்ககிழக்கினிற்புத்
தீசர்காக்க. 5

அக்கினியிற்சித்தீசர் காக்கவுமாபுத்திரர்தென்
னுசைகாக்க
மிக்கநிருதியிற்கணே சுரர்காக்கவிக்கினவர்த்
தனர்மேற்கென்னுந்

திக்கதனிற்காக்கவா யுவிக்கசகன்னன்காக்க
திகழுதீசி
தக்கதிதிபன்காக்க வடகிழக்கிலீசநந்
தனரேகாக்க. 6

ஏகதந்தர்புகன்முழுதுங் காக்கவிரவினுஞ்சக்தி
யிரண்டன்மாட்டும்
ஓகையின்விக்கின கிருது காக்கவிராக்கதர்பூத
முறுவேதாள
மோகினிபேயிவையாதி யுயிர்த்திறத்தாய்வருந்துயரு
முடிவிலாத
வேகமுறுபிணிப்லவும் விலக்குமீபாசாங்குசர்தாம்
விரைந்துகாக்க. 7

மதிஞானந்தவந்தான் மானமொளிபுகழ்குலம்வண்
சரீரமுற்றும்
பதிவானதனந்தானி யங்கிரகமனைவிமைந்தர்
பயினட்பாதிக்
கதியாவுங்கலந்துசர்வா யுதர்காக்ககாமர்பவுத்
திரர்முன்ஹன்
விதிபாகுஞ்சுற்றமெலா மயூரேசரெஞ்ஞான்றும்
விரும்பிகாக்க. 8

வென்றிசீவிதங்கபிலர் மாக்கரியாதியெலாம்
விகடர்காக்க
என்றிவ்வாறிதுதனைமுக்காலமுமோதிடினும்பா
லிடையூறொன்றும்
ஒன்றுறாமுனிவரர்காளறிமின்கள்யாரொருவ
ரோதினாலு
மன்றவராங்கவர்தேகம் பிணியறவச்சிரதேக
மாகிமன்னும்.

விநாயக கவசம் முற்றிற்று.

## சுப்பிரமணியர் உபாசன மந்திரம்

ஓம்நமோ நமசிவாயம் மயில்வாகன பாலசுப்பிரமண்யா ஐயும் கிலியும் சரஹணபவ மமவசிவசி சுவாகா. உரு-1008 ஜெபிக்கவும் சித்தியாம்.

### ஷெ சக்கர மெழுதுவது

அறுகோணம் போட்டு மத்தியினில் ஓங்காரமெழுதி அதின் முனைகளில் சரஹணபவவென்று பிரதக்ஷணமாக செப்புத் தகட்டில் எழுதி பூஜை செய்து ஜெபம் பண்ணவும்.

### ஷெ பூஜை விவரம்

காலையில் குளத்தில் முழுகி சுத்தவஸ்திரந்தரித்து விபூதி யணிந்து அநுஷ்டான முடித்து தனியிடத்தில் மெழுகி கோல மிட்டு கும்பத்திற் ஜலம்வைத்து கும்பத்திற் பட்டுவஸ்திரஞ் சாத்தி மாவிலைபோட்டு தேங்காய்வைத்து கும்பத்தின் முன் வாழையிலையில் தாம்பூலம் தேங்காய் பழம் பாயசம் பஞ்சா மிருதம் வைத்து தூபதீபங் கொடுத்து ஷெ முலமந்திரஞ் ஜெபிக்க சித்தியாம். வில்வப் பலகை முக்கியம், அல்லது மாம்பலகை ஆசனத்திலிருந்து 41 நாள் ஷெ உரு ஜெபித்து முடிக்கவும்.

### இதின் நன்மை

பேய்பிடித்த பெண்கள் முன்போய் நின்றவுடன் பேய் விலகிவிடும். ஷெ மூலமந்திரம் 108-விபூதியில் ஷெ சக்கரம் எழுதி ஜெயித்து ஷெ பெண்கள்மேற் போட ஓடிவிடும். காச்சல், பயம், சிலந்தி, பருவு முதலிய எந்த வியாதிக்கும் விபூதி பிடித்து இடவும் சவுக்கியமாம்.

### மூலமந்திரம்

ஓம் பகவதி புத்திரா-வேலாயுதா வேகமாய் வந்தென் முன் மனே அபீஷ்டம் சாதிக்கத்தக்க சரஹணபவா ஓம் ஐயும் கிலியும் சவ்வும் ஸ்ரீம் சண்முகதேவா வசிவசி சுவாகா. உரு-1008.

### ஷெ சக்கரம்

9-விரல் அகலம் நீளம் 9-விரல் சவுக்கத்தில் சந்தனப் பல கையில் இதைப்போல் அறுகோணங்கீறி மத்தியில் ஸ்ரீசத்தி

யுள்ள, ஆறுவீட்டிலும் சரஹணபவ யென்று, ஆறு எ
தையும் அடைத்து, ஆறுகோணத்து நுனியில் ஸ்ரீ யென்
ஆறுக்கும் எழுதி அறுகோணத்துக்கு வெளியில் சவுக்கம
வீடுசுற்றில் 2-வரை கீறி அதற்கு கிழக்கு மேற்கு வட
தெற்கு 4 வாசல் விட்டு, அவைகளில் ஸ்ரீ என்று எழுதி
சக்கரத்திற்கு வெள்ளைப் புஷ்பத்தினால் உரு ஜெபிக்கவும்.

பூஜை முன் சொல்லியிருக்கிறபடி செய்ய சித்தியாம்.

## இதன் நற்பலன்

எந்த காரியத்தை உத்தேசித்திருக்கிறார்களோ அந்
காரியமெல்லாம் தடையின்றி முடியும்.

## பாலசுப்பிரமணியா உபாசனம்

### மந்திர சக்தி

சக்தி அஸ்த விந்பாக்ஷம், சிகிவாகனம், சடானன
தாகபுரோக்கனம், பவ்யெத குக்குட த்வஜம்.



## சுப்பிரமணியர் உபாசன மந்திரம்

ஓம்நமோ நமசிவாய்ம் மயில்வாகன பாலசுப்பிரமண்யா ஐயும் கிலியும் சரஹணபவ மமவசிவசி சுவாகா. உரு-1008 ஜெபிக்கவும் சித்தியாம்.

### ஷ சக்கர மெழுதுவது

அறுகோணம் போட்டு மத்தியிளில் ஓங்காரமெழுதி அதின் முனைகளில் சரஹணபவவென்று பிரதக்ஷணமாக செப்புத் தகட்டில் எழுதி பூஜைசெய்து ஜெபம் பண்ணவும்.

### ஷ பூஜை விவரம்

காலையில் குளத்தில் முழுகி சுத்தவஸ்திரந்தரித்து விபூதி யணிந்து அநுஷ்டான முடித்து தனியிடத்தில் மெழுகி கோல மிட்டு கும்பத்திற் ஜலம்வைத்து கும்பத்திற் பட்டுவஸ்திரந் சாத்தி மாவிலைபோட்டு தேங்காய்வைத்து கும்பத்தின் முன் வாழையிலையில் தாம்பூலம் தேங்காய் பழம் பாயசம் பஞ்சா மிருதம் வைத்து தூபதீபங் கொடுத்து ஷை முலமந்திரஞ் ஜெபிக்க சித்தியாம். வில்வப் பலகை முக்கியம், அல்லது மாம்பலகை ஆசனத்திலிருந்து 41-நாள் ஷெ உரு ஜெபித்து முடிக்கவும்.

### இதின் நன்மை

பேய்பிடித்த பெண்கள் முன்போய் நின்றவுடன் பேய் விலகிவிடும். ஷை மூலமந்திரம் 108-விபூதியில் ஷை சக்கரம் எழுதி ஜெபித்து ஷை பெண்கள்மேற் போட ஓடிவிடும். காச்சல், பயம், சிலந்தி, பருவு முதலிய எந்த வியாதிக்கும் விபூதி பிடித்து இட்வும் சவுக்கியமாம்.

### மூலமந்திரம்

ஓம் பகவதி புத்திரா-வேலாயுதா- வேகமாய் வந்தென் முன் மனே அபீஷ்டம் சாதிக்கத்தக்க சரஹணபவா ஓம் ஐயும் கிலியும் சவ்வும் ஸ்ரீம் சண்முகதேவா வசிவசி சுவாகா உரு-1008.

### ஷ சக்கரம்

9-விரல் அகலம் நீளம் 9-விரல் சவுக்கத்தில் சந்தனப் பல கையில் இதைப்போல் அறுகோணங்கீறி மத்தியில் ஸ்ரீசத்தி

கூடுமெய்த்தொண்டர் குழாத்துடன் கூட்டி
அஞ்சக்கரத்தின் அரும்பொருடன்னை
நெஞ்சக்கரத்தி னிலையறிவித்துத்
தத்துவநிலையைத் தந்தெனையாண்ட
வித்தகவிநாயக விரைகழல்சரணே,

விநாயகர் அகவல் முற்றிற்று.

---

## விநாயகர் கவசம்

ஆதியில் இதனடியிற் கூறப்படும் இச்சக்கரத்தைக் காசிப முனிவர் மூற்கல முனிவருக்கு அருளிச் செய்ய அவர் மாண்டவ்ய முனிவருக்கு அநுக்கிரகிக்க, அவர் மரீசி முனிவருக்கு உபதேசித்தருள, அவர் பவனமுனிவருக்குத் திருவாய் மலர்ந்தருளிச் செய்தன ரென்றறிக.

இதை நித்திய கருமங்களை முடித்துப் பரிசுத்த மாகிய ஓரிடத்தில் இருந்துகொண்டு ஒன்றுபட்ட மனத் துடனே விநாயகரைத் தியானித்து இதைச் ஜெபிக்க வேண்டும்.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

வளர்சிகையைப்பராபரமாய் வயங்குவிநாயகர்காக்க
வாய்ந்தசென்னி
யளருபடாவதிகசவுந் தாதேகமதோற்கடர்தா
மமர்ந்துகாக்க
விளவநெற்றியையென்னும் விளங்கிய காசிபர்காக்க
புருவந்தம்மைத்
தளர்வின்மகோதரர்காக்க தடவிழிகள்பாலசந்
திரனார்காக்க. 1

கவின்வளருந்தரங்கச முகர்காக்கதாலங்கணக்
கிரீடர்காக்க
நாவில்சிவிகங்கிரிரைசுமுகதர் காக்கநனிவாக்கை
விநாயகர்தாங் காக்க

## சடாக்ஷர மாரல்

நாலுமறையும்புகழ்
மாலுமயனும்பணி
மேலுமரனுஞ்சொலும்
வேலுமயிலுந்துணை.

**வசியம்**—சரஹணபவஷ்ரீங்-சங்கரியீன்ற
சண்முகஹ்ரீங் ஓங்கார
சமயகாருண்யத்தலைவனேமுருகா
தந்தியின்சுழிதிரிகோணச்
சரஹணபவனுனைச்சகலருந்துதிக்கச்
சரியையுங்கிரியையுஞானச்
சதங்கைபொற்ருளிற்கலீரெனமயின்மேற்
ருவிமாசத்திவேற்ருங்கி
சரஹணபவவிச்சமயநீவந்துன்
சவ்-ரவ்-ஹவ்-ணவ்-பவ்-வவ்
சங்-கிலியும் ஐயும்-ஓமெனவசியுஞ்
சாற்றவன்பில்லிசூனியம்பேய்
சகலமுமாட்த்தலைவிரித்தோடச்
சங்-றிங்-சிங்-மங்-கெனவ்லா
சரணமாமென்முன்னடிவந்தருள்வாய்
சண்முகாசரஹணபவனே.



## மூல மந்திரம்

ஓம்-ரீம்-ஐயும்-கிலியும்-ஔவும்-சௌவும்-சரஹணபவ.

இந்தச் சக்கரத்தை வில்வப் பலகையில் வரைந்து, எழுத்துக்களை அடைத்து, சகல ஆசனத்தில் கிழக்கு முகமாக விருந்து பூசித்து உருத்திராக்ஷத் தாழ்வடத்தால் ஆதிவாரந் தொடங்கி 1008-உருவேற்ற சித்தியாகும்.

ஆக்ருஷணம்-ரஹணபவசவென்றடிக்கத்துதிக்க
ராட்சசகணமுதலொடுங்கி
ரவிதனைக்கண்டபனியதுபோலாம்
ரங்-கெனப்பிணிபலவடங்கும்
ரஹணபவச-வென்னநாவுக்கிரைக்கி
னற்றவப்பேருபாக்கியமாம்
லலி-லிலி லூலூ வென்றகத்தினிற்ஜெபிக்க
நானிலந்தொழும்-வங சிங்-கென்ன
ரஹணபவச-ஹங-சிங்-வங்-கென்ன
னமனனுகானயனெழுதான
நம்-நம்-சிவயு-நம்-மெனபீடை
நவில்மதிகண்டாராப்போலாம்
ரஹணபவச-வெனும்பொருட்பொதிகை
நாதனுக் கோதியகுருவே
ரஞ்சிதக்குறமாதுவஞ்சிகாதலனே
ரஹணபவச நாயகனே. 2



## மூல மந்திரம்

றீங்-ஐயும்-கிலியும்-ஔவும்-சௌவும்-ஓம்-ரஹணபவச.

இந்தச் சக்கரத்தை வெண்ஞ்வற் பலகையில் வரைந்து எழுத்துக்களை யடைத்து, பட்டு ஆசனம் ஈசானிய முகமாக விரித்து பூசித்து ஸ்படிகத் தாழ்வடத்தால், குருவாரந் தொடங்கி 1008-உருவேற்ற சித்தியாகும்.

**மோகனம்**—ஹண்பவ்சரவென்றறியானயன்மால்
அமரர்மாதவர்களுந்துதிக்க
அய்யுடன் றீயுங் கிலி ஹரி சவ்வும்
ஐம்பத்தோரக்ஷரமுதலாய்
ஹணபவசரவென்-றடிக்கக்கோதும்
அடியவர்க்கருள் செய்யும்பொருளே
ஹ்ரி நமசிவய-வென்றுடல்மறைந்தும்
அங்-சிங்-வங்-கென்றிடமோகனம்
ஹணபவசர-ஆ ஈ-ஏ-ஓ
அம்மெனுமட்சரஞ்செபிக்க
அண்டமெண்டிசையும்சராசரபிண்டம்
அக்கினிசோதியதாகி
ஹண்பவ்சரவென்ருய்ந்திட்ச்சத்தி
ஆதியோடுவந்தருள்புரியும்
ஆறுமாமுகவென் குறைதவிர்த்தாள்வாய்
ஹணபவசர பிரணவனே. 3



## மூல மந்திரம்

ஐயும்-கிலியும்-சௌவும்-ஓம்-நீங்-ஹணபவசர.

இந்தச் சக்கரத்தை அலரிப் பலகையில் வரைந்து எழுத்துக்களை யிட்டுத்து புலி ஆசனத்தில், வடக்கு முகமாகவிருந்து பூசித்து மிளகு தாழ்வடத்தால் சோமவாரந் தொட்டுங்கி 1008-உருவேற்ற சித்தியாகும.

தம்பனம்—ணபவசரஹவென் றுருவோத
ஞானமுங்கல்வியுமபெருகும்
ஈங்கெனமோகயோகபோகமுமாம்
நமசிவயவெனத்துதித்தால்
நாற்பத்திரண்டுகோணயந்திரமும்
நடுக்கமாம்-ஹங்-நீங்-இங்-ரீங்
நங்-உங்-டங்-மங்-சிங்-வங்-கென் றபடி
நல்லுருப்போடதம்பனமாம்
ணபவசரஹவெனத்தொழநோய்கள்
நவிலுனற்றழும்பு சோகையும்போம்
நளிர்சுரம்வாந்திபௌத்திரமூலம்
ரத்தநோய்மூர்ச்சைபாழ்ப்பிளவை
நடுக்கமாமிடுக்கண்கிரந்தியின்மேக
நலிபெருஞ் சிலைப்புவல்லிருமல்
நாடிடாதோடுங்குன் றுதோருடும்
ணபவசரஹ நற்பொருளே. 4



## மூல மந்திரம்

கிலியும்-ஔவும்-சௌவும்-ஓம்-றீம்-ஐயும்-ணபவசரஹ.

இந்தச் சக்கரத்தை ஆலம் பலகையில் வரைந்து எழுத்துக்களை யடைத்து தற்பாசனத்தில் நிருதி திசை முகமாக விருந்து பூஜித்து தாமரைமணத் தாழ்வடத்தால் அங்காரக வாரம் தொடங்கி 1008-உருவேற்றச் சித்தியாகும்.

உச்சாடனம்— பவசரஹணநின் பரமெனுமடியர்
பவங்கெடசுகந் தருமணியே
பரா-பரி-ஐயுங்-கிலி-ஹ சவ்வும்
பங்-ரீங்-ஓ-மெனு கார
பவசரஹணவென் றுனைத்தொழமுத்தி
பதித்திடுஞ்சத்தியாம்வெற்றி
பரைபரிமவனை திரிபுரபவனை
பகர்நமசிவயவரம்பேறும்
பவசரஹணவென்றேதமாமயின்மேற்
பரிந்தெழுந்தபயமென்றருளி
பசிபிணிகெடவும்வுடபயமுதுமை
படிற்றுரைகடையவர்நெஞ்சம்
மாசமுவாகை டங்-டிங்-கென்னவும்
படுவினைப்பூத வேதாளப்
பகைதவிர்த்தாள்வாய் பவசரஹணநின்
பாதமேகதி குருபரனே.

5



## மூல மந்திரம்.

ஔவும் சௌவும்-ஓம்-றீங்-ஐயும்-கிலியும்-பவசரஹ்ண.

இந்தச் சக்கரத்தை பலாப் பலகையில் வரைந்து, எழுத்துக்களை யடைத்து, நித்திராசனத்தில் வாய்வு முகமாகவிருந்து பூசித்து சிந்தில் மாலைத் தாழ்வடத்தால் புதவாரந் தொட்டங்கி 1008-உருவேற்றச் சித்தியாகும்.

மாரணம்—வசரஹணப் வெனச்செபித்திடவும்
வருசரஹண பவவெனவும்
வனசபூம்பதமும் மகரகுண்டலமும்
வயங்குமா மகுடமும்சிரமும்
வச்சிராக்கியுமேற் கடககங்கணமும்
மருவிழிகருணையும்வேலும்
வாணருக்குதவும் சேவலுமயிலும்
வள்ளிதெய்வயானையுமுடனே
வாஞ்சையாகக்கண்டு மகிழ்ந்திடக்கொடியேன்
வாழ்த்துமிச் சடாக்ஷரமாரல்
வச்சிரக்கல்லு மணிச்சிறுமாலும்
மகிழ்ந்திடும் செட்டிமாமகனே
வரியனுக்குதவும் காக்ஷியும் வாழ்வும்
வளர்ததிட்வடட மிடடவர்க்கு
வலுவுறச்செலவுமிக போகபாக்கியமும்
மகிழ்ந்தளித்தருள் சடாட்சரனே. 6



## மூல மந்திரம்

சௌவும்-ஓம்-றீம்-ஐயும்-கிலியும்-ஔவும்-வசரணஹப.

இந்தச் சக்கரத்தை அத்திப் பலகையில் வரைந்து, எழுத்துக்களை யடைத்து வேங்கை யாசனத்தில் அக்கினி முகமாக விருந்து பூசித்து நாடிமணித் தாழ் வடத்தால் சனிவாரந் தொடங்கி 1008-உருவேற்றச் சித்தியாகும்.

## சமுதாயமாரல்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ச | ர | ஹ | ண | ப | வ |
| ர | ஹ | ண | ப | வ | ச |
| ஹ | ண | ப | வ | ச | ர |
| ண | ப | வ | ச | ர | ஹ |
| ப | வ | ச | ர | ஹ | ண |
| வ | ச | ர | ஹ | ண | ப |

இந்தச் சக்கரத்தை வெள்ளி அல்லது தங்க ரேக்கில் வரைந்து எழுத்துக்களை யடைத்து, பதுமாசனத்தில் கிழக்கு முகமாக விருந்து பூசித்து, உருத்திராக்ஷத் தாழ்வடத்தால் 1008-உரு தினம் ஜெபிக்கச் சகல காரியமும் சித்தியாகும்.

சடாக்ஷரமாரல் முற்றிற்று.

# கந்தர் சஷ்டி கவசம்

துதிப்போர்க்கு வல்வினைபோம் துன்பம்போம் நெஞ்சிற்
பதிப்போர்க்குச் செல்வம் பலித்துக்-கதித்தோங்கும்
நிஷ்டையுங் கைகூடு நிமல ரருள்கந்தர்
சஷ்டி சவசந் தனை.

அமாரிடர் தீர அமரம் புரிந்த
குமரனடி நெஞ்சே குறி.

சஷ்டியைநோக்கச் சரவணபவனார்
சிஷ்டருக்குதவுஞ் செங்கதிர்வேலோன்
பாதமிரண்டில் பன்மணிச்சதங்கை
கீதம்பாடக் கிண்கிணியாட
மையநடஞ்செயும் மயில்வாகனனார்
கையில்வேலாலெனைக் காக்கவென் றுவந்து
வரவரவேலா யுதனார்வருக
வருகவருக மயிலோன் வருக
இந்திரன்முதலா வெண்டிசைபோற்ற
மந்திரவடிவேல் வருகவருக
வாசவன்மருகா வருகவருக
நேசக்குறமகள் நினைவோன்வருக
ஆறுமுகம்படைத்த ஐயாவருக
நீறிடும்வேலவன் நித்தம்வருக
சிரகிரிவேலவன் சீக்கிரம்வருக
சரஹணபவனார் சடுதியில்வருக
ரஹணபவச ரரரர ரரர
ரிஹணபவச ரிரிரிரி ரிரிரி
விணபவசரஹ வீராநமோநம
நிபவசரண நிறநிறநிறென
வசரஹணப வருகவருக
அசுரர்குடிகெடுத்த ஐயாவருக
என்னையாளு மிளையோன் கையில்
பன்னிரண்டாயுதம் பாசாங்குசமும்

பரந்தவிழிகள் பன்னிரண்டிலங்க
விரைந்தெனைக்காக்க வேலோன்வருக
ஐயுங்கிலியும் அடைவுடன்சௌவும்
உய்யொளிசௌவும் உயிரையுங்கிலியும்
கிலியுஞ்சௌவும் கிளரொளியையும்
நிலைபெற்றென்முன் நித்தமுமொளிரும்
சண்முகன் நீயும் தனியொளியொவ்வும்
குண்டலியாஞ்சிவ குகன் தினம்வருக
ஆறுமுகமும் அணிமுடியாறும்
நீறிடுநெற்றியும் நீண்டபுருவமும்
பன்னிருகண்ணும் பவளச்செவ்வாயும்
நன்னெறிநெற்றியில் நவமணிச்சுட்டியும்
ஈராறுசெவியில் இலகுகுண்டலமும்
ஆறிருதிண்புயத் தழகியமார்பில்
பல்பூஷணமும் பதக்கமுந்தரித்து
நண்மணிபூண்ட நவரத்னமாலையும்
முப்புரிநூலும் முத்தணிமார்பும்
செப்பழகுடைய திருவயிறுந்தியும்
துவண்டமருங்கில் சுடரொளிப்பட்டும்
நவரத்னம்பதித்த நற்சீராவும்
இருதொடையழகும் இணைமுழந்தாளும்
திருவடியதனில் சிலம்பொலிமுழங்க
செககணசெககண செககணசெகண
மொகமொகமொகமொக மொகமொகமொகென
நகநகநகநக நகநகநகென
டிகுகுணடிகுடிகு டிகுகுணடிகுண
ரரரர ரரரர ரரரர ரரர
ரிரிரிரி ரிரிரிரி ரிரிரிரி ரிரிரி
டுடுடுடு டுடுடு டுடுடுடு டுடுடு
டகுடகுடிகுடிகு டங்குடிங்குகு
விந்துவிந்து மயிலோன்விந்து
முந்துமுந்து முருகவேள்முந்து
என்றனையாளும் ஏரகச்செல்வ
மைந்தன்வேண்டும் வரமகிழ்ந்துதவும்

லாலாலாலா லாலாவேசமும்
லீலாலீலா லீலாவிநோதனென்
றுன்றிருவடியை உறுதியென்றெண்ணும்
என்றலைவைத்துன் இணையடிகாக்க
என்னுயிர்க்குயிராம் இறைவன்காக்க
பன்னிருவிழியால் பாலனைக்காக்க
அடியேன்வதனம் அழகுவேல்காக்க
பொடிபுனைநெற்றியைப் புனிதவேல்காக்க
கதிர்வேலிரண்டு கண்ணினைக்காக்க
விதிசெவியிரண்டும் வேலவர்காக்க
நாசிகளிரண்டும் நல்வேல்காக்க
பேசியவாய்தனைப் பெருவேல்காக்க
முப்பத்திருபல் முனைவேல்காக்க
செப்பியநாவைச் செவ்வேல்காக்க
கன்னமிரண்டும் கதிர்வேல்காக்க
என்னிளங்கழுத்தை இனியவேல்காக்க
மார்பையிரத்ந வடிவேல்காக்க
சேரிளமுலைமார் திருவேல்காக்க
வடிவேலிருதோள் வளம்பெறக்காக்க
பிடரிகளிரண்டும் பெருவேல்காக்க
அழகுடன்முதுகை அருள்வேல்காக்க
பழுபதினாறும் பருவேல்காக்க
வெற்றிவேல்வயிற்றை விளங்கவேகாக்க
சிற்றிடையழகுறச் செவ்வேல்காக்க
நாணாங்கயிற்றை நல்வேல்காக்க
ஆண்குறியிரண்டும் அயில்வேல்காக்க
பிட்டமிரண்டும் பெருவேல்காக்க
வட்டக்குதத்தை வல்வேல்காக்க
பணைத்தொடையிரண்டும் பருவேல்காக்க
கணைக்கால்முழந்தாள் கதிர்வேல்காக்க
ஐவிரலடியிணை அருள்வேல்காக்க
கைகளிரண்டும் கருணைவேல்காக்க
முன்கையிரண்டும் முரண்வேல்காக்க
பின்கையிரண்டும் பின்னவளிருக்க

உன்னைத்துதிக்க உன்திருநாமம்
சரஹணபவனே சைலொளிபவனே
திரிபுரபவனே திகழொளிபவனே
பரிபுரபவனே பவமொளிபவனே
அரிதிருமருகா அமராபதியைக்
காத்துத்தேவர்கள் கடுஞ்சிறைவிடுத்தாய்
கந்தாகுகனே கதிர்வேலவனே
கார்த்திகைமைந்தா கடம்பாகடம்பனை
இடும்பனைஎன்ற இனியவேல்முருகா
தணிகாசலனே சங்கரன்புதல்வா
கதிர்காமத்துறை கதிர்வேல்முருகா
பழநிப்பதிவாழ் பாலகுமாரா
ஆவினன்குடிவாழ் அழகியவேலா
செந்தின்மாமலையுறும் செங்கல்வராயா
சமராபுரிவாழ் சண்முகத்தரசே
காரார்குழலாள் கலைமகணன்றாய்
என்னாவிருக்க யானுனைப்பாட
எனைத்தொடர்ந்திருக்கும் எந்தைமுருகனை
பாடினேனாடினேன் பரவசமாக
ஆடினேனாடினேன் ஆவினன்பூதியை
நேசமுடன்யான் நெற்றியிலணியப்
பாசவினைகள் பற்றதுநீங்கி
உன்பதம்பெறவே உன்னருளாக
அன்புடனிரக்ஷி அன்னமும்சொன்னமும்
மெத்தமெத்தாக வேலாயுதனார்
சித்திபெற்றடியேன் சிறப்புடன்வாழ்க
வாழ்கவாழ்க மயிலோன்வாழ்க
வாழ்கவாழ்க வடிவேல்வாழ்க
வாழ்கவாழ்க மலைக்குருவாழ்க
வாழ்கவாழ்க மலைக்குறமகளுடன்
வாழ்கவாழ்க வாரணத்துவசம்
வாழ்கவாழ்கவென் வறுமைகணீங்க
எத்தனைகுறைகள் எத்தனைபிழைகள்
எத்தனையடியேன் எத்தனைசெய்தால்

## முதற் பாகம்

பெற்றவனீகுரு பொறுப்பதுன் கடன்
பெற்றவள்குறமகள் பெற்றவளாமே
பிள்ளையென்றன்பாய்ப் பிரியமளித்து
மைந்தனென்மீதுன் மனமகிழ்ந்தருளித்
தஞ்சமென்றடியார் தழைத்திடவருள்செய்
கந்தர்சஷ்டி கவசம்விரும்பிய
பாலன்தேவ ராயன்பகர்ந்ததைக்
காலையில்மாலையில் கருத்துடனாளும்
ஆசாரத்துடன் அங்கந்துலக்கி
நேசமுடனொரு நினைவதுவாகிக்
கந்தர்சஷ்டி கவசமிதனைச்
சிந்தைகலங்காது தியானிப்பவர்கள்
ஒருநாள்முப்பத் தாறுருக்கொண்டு
ஓதியேசெபித்து உகந்துநீறணிய
அஷ்டதிக்குள்ளோர் அடங்கலும்வசமாய்த்
திசைமன்னரெண்மர் செயலதருளுவர்
மாற்றலரெல்லாம் வந்துவணங்குவர்
நவகோண்மகிழ்ந்து நன்மையளித்திடும்
நவமதனெனவும் நல்லெழில்பெறுவர்
எந்தநாளுமீ ரெட்டாய்வாழ்வர்
கந்தர்கைவேலாங் கவசத்தடியை
வழியாய்க்காண மெய்யாய்விளங்கும்
விழியாற்காண வெருண்டிடும்பேய்கள்
பொல்லாதவரைப் பொடிபொடியாக்கும்
நல்லோர்நினைவில் நடனம்புரியும்
சர்வசத்துரு சங்காரத்தடி
அறிந்தெனதுள்ளம் அஷ்டலட்சுமிகளில்
வீரலட்சுமிக்கு விருந்துணவாக
சூரபத்மாவைத் துணித்தகையதனால்
இருபத்தேழ்வர்க் குவந்தமுதளித்த
குருபரன்பழநிக் குன்றினிலிருக்கும்
சின்னக்குழந்தை சேவடிபோற்ற
எனைத்தடுத்தாட்கொள என்றனதுள்ளம்
மேவியவடிவுறும் வேலவபோற்றி

நாவிற்சரஸ்வதி நற்றுணையாக
நாபிக்கமலம் நல்வேல்காக்க
முப்பானாடியை முனைவேல்காக்க
எப்பொழுதும்மெனை எதிர்வேல்காக்க
அடியேன் வசனம் அசைவுளநேரம்
கடுகவேவந்து கனகவேல்காக்க
வரும்பகற்றன்னில் வச்சிரவேல்காக்க
அரையிருட்டன்னில் அனையவேல்காக்க
ஏமத்தில்சாமத்தில் எதிர்வேல்காக்க
தாமதநீக்கிச் சதுர்வேல்காக்க
காக்ககாக்க கனகவேல்காக்க
நோக்கநோக்க நொடியினோக்க
தாக்கதாக்க தடையறத்தாக்க
பார்க்கபார்க்க பாவம்பொடிபட
பில்லிசூனியம் பெரும்பகையகல
வல்லபூதம் வலாஷ்டிகப்பேய்கள்
அல்லற்படுத்தும் அடங்காமுனியும்
பிள்ளைகள்தின்னும் புழைக்கடைமுனியும்
கொள்ளிவாய்ப்பேய்களும் குறளைப்பேய்களும்
பெண்களைத்தொடரும் பிரமராக்ஷதரும்
அடியனைக்கண்டால் அலறிக்கலங்கிட
இரிசிகாட்டேரி இத்துன்பச்சேனையும்
எல்லினுமிருட்டிலும் எதிர்ப்படுமண்ணரும்
கனபூசைகொள்ளும் காளியோடனைவரும்
விட்டாங்காரரும் மிகுபலபேய்களும்
தண்டியக்காரரும் சண்டாளர்களும்
என்பெயர்சொலவும் இடிவிழுந்தோடிட
ஆனையடியினில் அரும்பாவைகளும்
பூனைமயிரும் பிள்ளைகளென்பும்
நகமும்மயிரும் நீண்முடிமண்டையும்
பாவைகளுடனே பலகலசத்துடன்
மனையிற்புதைத்த வஞ்சனைதனையும்
ஒட்டியச்செருக்கும் ஒட்டியப்பாவையும்
காசும்பணமும் காவுடன்சோறும்

ஓதுமஞ்சனமும் ஒருவழிப்போக்கும்
அடியனைக்கண்டால் அலறிக்கலங்கிட
மாற்றான் வஞ்சகர் வந்துவணங்கிட
காலதூதாளெனைக் கண்டாற்கலங்கிட
அஞ்சிநடுங்கிட அரண்டுபுரண்டிட
வாய்விட்டலறி மதிகெட்டோட
படியினின் முட்டப் பாசக்கயிற்றால்
கட்டுடனங்கம் கதறிடக்கட்டு
கட்டியுருட்டு கால்கைமுறிய
கட்டுகட்டு கதறிடக்கட்டு
முட்டுமுட்டு விழிகள்பிதுங்கிட
செக்குசெக்கு செதிற்செதிலாக
சொக்குசொக்கு சூர்ப்பகைச்சொக்கு
குத்துகுத்து கூர்வடிவேலால்
பற்றுபற்று பகலவன்றணலெரி
தணலெரிதணலெரி தணலதுவாக
விடுவிடுவேலை வெருண்டதுவோட
புலியுநரியும் புன்னரிநாயும்
எலியுங்கரடியும் இனித்தொடர்ந்தோட
தேளும்பாம்பும் செய்யான்பூரான்
கடிவிடவிஷங்கள் கடித்துயரங்கம்
ஏறியவிஷங்கள் எளிதுடனிறங்க
ஒளிப்புஞ்சுளுக்கும் ஒருதலைநோயும்
வாதஞ்சயித்தியம் வலிப்புப்பித்தம்
சூலைக்ஷயங்குன்மம் சொக்குச்சிரங்கு
குடைச்சல்சிலந்தி குடல்விப்பிரிதி
பக்கப்பிளவை படர்தொடைவாழை
கடுவன்படுவன் கைத்தாள்சிலந்தி
பற்குத்தரணை பருவரையாப்பும்
எல்லாப்பிணியும் என்றனைக்கண்டால்
நில்லாதோட நீயெனக்கருள்வாய்
ஈரேழுலகமும் எனக்குறவாக
ஆணும்பெண்ணும் அனைவருமெனக்கா
மண்ணாளரசரும் மகிழ்ந்துறவாகவும்

உன்னைத்துதிக்க உன்திருநாமம்
சரஹணபவனே சைலொளிபவனே
திரிபுரபவனே திகழொளிபவனே
பரிபுரபவனே பவமொளிபவனே
அரிதிருமருகா அமராபதியைக்
காத்துத்தேவர்கள் கடுஞ்சிறைவிடுத்தாய்
கந்தாகுகனே கதிர்வேலவனே
கார்த்திகைமைந்தா கடம்பாகடம்பனை
இடும்பனை என்ற இனியவேல்முருகா
தணிகாசலனே சங்கரன்புதல்வா
கதிர்காமத்துறை கதிர்வேல்முருகா
பழநிப்பதிவாழ் பாலகுமாரா
ஆவினன்குடிவாழ் அழகியவேலா
செந்தின்மாமலையுறும் செங்கல்வராயா
சமராபுரிவாழ் சண்முகத்தரசே
காரார்குழலாள் கலைமகணன்றாய்
என்னாவிருக்க யானுனைப்பாட
எனைத்தொடர்ந்திருக்கும் எந்தைமுருகனை
பாடினேனாடினேன் பரவசமாக
ஆடினேனாடினேன் ஆவினன்பூதியை
நேசமுடன்யான் நெற்றியிலணியப்
பாசவினைகள் பற்றதுநீங்கி
உன்பதம்பெறவே உன்னருளாக
அன்புடனிரக்ஷி அன்னமும்சொன்னமும்
மெத்தமெத்தாக வேலாயுதனார்
சித்திபெற்றடியேன் சிறப்புடன்வாழ்க
வாழ்கவாழ்க மயிலோன்வாழ்க
வாழ்கவாழ்க வடிவேல்வாழ்க
வாழ்கவாழ்க மலைக்குருவாழ்க
வாழ்கவாழ்க மலைக்குறமகளுடன்
வாழ்கவாழ்க வாரணத்துவசம்
வாழ்கவாழ்கவென் வறுமைகணீங்க
எத்தனைகுறைகள் எத்தனைபிழைகள்
எத்தனையடியேன் எத்தனைசெய்தால்

லாலாலாலா லாலாவேசமும்
லீலாலீலா லீலாவிநோதனென் -
றுன்றிருவடியை உறுதியென்றெண்ணும்
என்றலைவைத்துன் இணையடிகாக்க
என்னுயிர்க்குயிராம் இறைவன்காக்க
பன்னிருவிழியால் பாலனைக்காக்க
அடியேன்வதனம் அழகுவேல்காக்க
பொடிபுனைநெற்றியைப் புனிதவேல்காக்க
கதிர்வேலிரண்டு கண்ணினைக்காக்க
விதிசெவியிரண்டும் வேலவர்காக்க
நாசிகளிரண்டும் நல்வேல்காக்க
பேசியவாய்தனைப் பெருவேல்காக்க
முப்பத்திருபல் முனைவேல்காக்க
செப்பியநாவைச் செவ்வேல்காக்க
கன்னமிரண்டும் கதிர்வேல்காக்க
என்னிளங்கழுத்தை இனியவேல்காக்க
மார்பையிரத்ந வடிவேல்காக்க
சேரிளமுலைமார் திருவேல்காக்க
வடிவேலிருதோள் வளம்பெறக்காக்க
பிடரிகளிரண்டும் பெருவேல்காக்க
அழகுடன்முதுகை அருள்வேல்காக்க
பழுபதினாறும் பருவேல்காக்க
வெற்றிவேல்வயிற்றை விளங்கவேகாக்க
சிற்றிடையழகுறச் செவ்வேல்காக்க
நாணாங்கயிற்றை நல்வேல்காக்க
ஆண்குறியிரண்டும் அயில்வேல்காக்க
பிட்டமிரண்டும் பெருவேல்காக்க
வட்டக்குதத்தை வல்வேல்காக்க
பணைத்தொடையிரண்டும் பருவேல்காக்க
கணைக்கால்முழந்தாள் கதிர்வேல்காக்க
ஐவிரலடியிணை அருள்வேல்காக்க
கைகளிரண்டும் கருணைவேல்காக்க
முன்கையிரண்டும் முரண்வேல்காக்க
பின்கையிரண்டும் பின்னவளிருக்க

தேவர்கள்சேனா பதியேபோற்றி
குறமகள்மனமகிழ் கோவேபோற்றி
திறமிகுதிவ்விய தேகாபோற்றி
இடும்பாயுதனே இடும்பாபோற்றி
கடம்பாபோற்றி கந்தாபோற்றி
வெட்சிபுனையும் வேளேபோற்றி
உயர்கிரிகனக சபைக்கோரரசே
மயில்நடமிடுவோய் மலரடிசரணம்
சரணஞ்சரணஞ் சரஹணபவஓம்
சரணஞ்சரணம் சண்முகாசரணம்.

கந்தர் சஷ்டி கவசம் முற்றிற்று.

---

## சுப்பிரமணியர் மந்திரம்

ஹரிஓம் சிவனென்ற முருகா அறுமுகவடிவேல் கந்தா குமரா எந்தனுக்கருள் புரிவாய், என்வினைகளை யறுப்பாய் ஏறியமயிலும் சூரசம்மாரா, சுப்பிரமணியா மூவிருநாமம் முகந்தனில் தரித்தாய், வள்ளி தெய்வானை மனோகரஸ்வாமி விபூதியொருகை வாளொருகை வல்லயமொருகை சூலமொருகை சக்குமாந்தடி யொருகை அம்பொருகை வில்லொருகை ஆயுதமொருகை, கபாலமொருகை தண்டாயுதமொருகை, பன்னிருகையால் ஆயுதமெடுத்துப் பிரயோகம் பண்ணி எரிவரி வந்த கொலைபாதகம் வழிகட்டுப் பேய்களும் கொள்ளிவாய்ப் பிசாசும் குட்டிச் சிறுதலைகளும் பல் பல எதிர்த்துப்பற்றி வெறிந்திடு, அரனருள் சுதனே, அத்தனே, சூரசங்காரனே நித்தனே சிவசுப்பிரமணியக் கடவுளே மூலமந்திரம் ஓம் சவுக்குலிங்காய நமஃ சவுடாதாராய நமஃ வாலாயினம் புலியாயினம்.




உரு 1200 சுத்தபூஜை

இந்த இயந்திரத்தை குளுசமாடிக் கட்டவும். காத்து கருப்பு முதலியதும் பாலகிரகமானதுகளும் தீரும். மற்றும் பயம், சோகம் அச்சமுந்தீரும். பிசாசுகளுக்கும் தனரயிற் கீறி குத்தவைக்கவும் ஆடும். சகல தோஷங்களும் தீரும்.

## கந்தர் கவசம்

### வெண்பா

நினைவான் இருவினைபோம் நெஞ்சினில் வாயோதக்
கனிவாய் பலநலமும் காட்டும்—தனைநாடி
வந்தனைசெய் வோர்க்கு வரமுதவும் செங்கதிர்வேல்
கந்தர்கவ சம்கூறும் கால்.

அமரர் துயர்தீர அன்று பொருத
குமரனடிப் போதிணையே கூறு.

## ஆசிரியப்பா

சரவணபவகுக,சண்முகமுருக
சுரமகள் தழுவிய சுந்தரமுருக
கருக்குழி தனில்விழரார் கண்டுமகிழத்
திருப்பரங்குன்றில் திகழ்ந்தருள்முருக
மந்திரமுனிவோர் வந்துவழிபடச்
செந்தில்நகரில் சேர்ந்தருள்முருக
காவியும்தண்டும் கண்டோர்பரவ
ஆவினன்குடியில் அடைந்தருள்முருக. 1

நீரகத்தோர்கள் நித்தலும்தொழுதெழ
ஏரகவெற்பில் எழுந்தருள்முருக
வந்தமாதவர் வகைவகை துதிசெயக்
கந்தமாதனத்தில் கலந்தருள்முருக
அயிலைப்பொருவிழி யரம்பைகள்பரவக்
கயிலைச்சிலம்பில் கமழ்ந்தருள்முருக
கருமலைபொடிபடக் கண்டவர்சூழத்
திருமலையதனில் சிறந்தருள்முருக. 2

வேங்கையுடைவனை வேதியர்துதிக்க
வேங்கடகிரிவயின் விரைந்தருள்முருக
பணியணிபரசிவன் பழமறைப்பொருள்பெறத்
தணிகையங்குவட்டில் தழைத்தருள்முருக
நள்ளிருள் தன்னில் நாச்சியார்நலமுற
வள்ளிமலையில் வாழ்ந்தருள்முருக
கன்றூல்விளவெறி கண்ணன்சிவமுறக்
குன்றத்தூரில் குளிர்ந்தருள்முருக. 3

இழுக்கண்டாத்தவர் இருந்தருள் அணிபெறக்
கழுக்குன்றிடத்தில் கனிந்தருள்முருக
குறையாம்புலன் சுழல்வழிப்படார்தொழப்
பேறைமலையில் பீடருள்முருக
குயிலாம்மனுமொழிக் குஞ்சரிமகிழ்வுற
மயிலாசலத்தில் மகிழ்ந்தருள்முருக
துரிசுறுத்தவர்பலர் தூநலமடைவான்
திரிசிராமலையில் திகழ்ந்தருள்முருக. 4

முதற் பாகம்

பொற்புரியவர்நலம் பொருந்திப்பிழைக்கக்
கற்குடியகத்தில் கவின்பெறுமுருக
ஒரத்தையுடன்பணி சீரியோர் அழகுற
இரத்தினகிரியில் இருந்தருள்முருக
இராதஇடையவர் இருபுறமருவ
விராலிமலையில் விரைந்தருள்முருக
அநாதியாகிய அமலன் துதிசெய
விநாயகமலையில் விருப்பருள்முருக.

கொங்கோடலர்தொடு குரவர் அணிபெறச்
செங்கோடதனில் சேர்ந்தருள்முருக
கல்விவிழைதநீர் கலந்துவழிபடக்
கொல்லிமலையில் குழைந்தருள்முருக
ஏனமாகிய இறைவன்பதம்பெற
ஞானமலையில் நயந்தருள்முருக
ஒப்புயர்வில்லா ஒருவன் அருளுறச்
செப்புவெற்பில் செழித்தருள்முருக.

இருடிகள்தவவினை யினைப்புறுவண்ணம்
குருடிமலையில் குறித்தருள்முருக
எங்குலபொருளுங் ஏற்பவர்பெற்றுயக்
கொங்கணகிரியில் கூர்ந்தருள்முருக
இடும்ஞணம்பெரிதேய் இறையகன்உயிர்பெறக்
கொடுங்குன்றதனில் குனித்தருள்முருக
பன்றிக்கன்றருள் பரன்பிரணவம்பெறக்
குன்றக்குடியில் கொடுத்தருள்முருக.

வசுக்கள்வழியுற வந்துபரர்விடப்
பசுமலையிடத்தில் பதிந்தருள்முருக
நதியணியரனிகர் நற்றமிழ்ஞ்னிபெறப்
பொதிகைமலையில் புகழ்ந்தருள்முருக
அழகியபாண்டியன் அடியிணைபெற்றுயக்
கழுகுமலையில் கவிந்தருள்முருக
தெள்ளியவினையில் தொடக்குறார்பரவ
வள்ளியூரில் வதிந்தருள்முருக.

எதிராறுதவத்தோர்க் கிடருறுவண்ணங்
கதிர்காமத்தில் கசிந்தருள்முருக
கழைமலர்பிடிமதன் கவின்பெறப்போற்றப்
பழமுதிர்சோலையில் பதிந்தருள்முருக
வருகமுருக வருகமுருக
கருணையுடனே கணைதிர்நன்கு
ஆறுமுகமும் அழகியமுடியும்
நீறுபுனைந்த நிகராறுநெற்றியும். 9

புகலுறுபுருவமும் புனைந்தகட்டியும்
மகரகுண்டலம் மாட்டியசெவியும்
கண்டிகைபூண்ட கவின்பெறுகளமும்
விண்டிசைமதிக்க விளங்குறுமார்பும்
பன்னிருதோளும் பவளவாயும்
கன்னியர்இருவர் கலந்தகோலமும்
அபயவரதமும் அழிலும்மயிலும்
சுபமருள்பங்கய சுந்தரவடிவும். 10

கோழிக்கொடியும் சூர்நவவீரரும்
வாழிமொழிபகர் வானவர்குழுவும்
தோற்றஅடிமைமுன் தோகையில்வந்து
மாற்றார்தம்மை வதைத்தருள்முருக
ஓம்வசியவசிய ஓங்காரமுருக
ஸ்ரீம்ஹ்ரீங்சிவசிவ ஸ்ரீங்காரமுருக
சம்சிங்சரவண பவவோம்முருக
ரம்ரங்ரவணப வசஜபும்முருக. 11

ஹும்உங்வணபவ சரக்லீயும்முருக
ணம்ணங்ணபவச ரவசௌவும்முருக
பம்பங்பவசர வணஹ்ரீயும்முருக
வம்வங்வசரவ ணபஸ்ரீயும்முருக
சிவசிவசிவசிவ சிவாயநமஹ
சங்கரசங்கர சயஒளிபவாய
ஓம்திரிபுரபவ ஓம்திகழொளிபவ
ஓம்பரிபுரபவ ஓம்பவஜொளிபவ. 12

ஓம்குருபரபவ ஓம்குகனொளிபவ
ஓம்சிவகரபவ ஓம்சிகரரநம
ஓம் ஆம்க்ரீயும் ஓம் க்லீம்ஐயும்
ஆம்ஓம் அவ்வும் அம்சிவாயநம
ஊம் ஆம்க்லீயும் சவ்க்ரீயும்ரீயும்
ஓம்ரீயும்க்ரீயும் சவ்க்ரீஐயும்
ஆனமுருக அழகியமுருக 13
வானமுருக வரமருள்முருக.

அல்லலாம்தொழிலை அகற்றிடுமுருக
பில்லிசூனியம் பெயர்த்தெறிமுருக
கட்டமாம்வினையைக் களைந்தெறிமுருக
குட்டிமோகினியைக் குலைத்திடுமுருக
கறுப்பனைவீரனைக் களைந்திடுமுருக
குறிபகர்மாடனைக் கொளுத்திடுமுருக
இடாகினிதன்னை இழுத்தெறிமுருக
அடாதகுறளியை அடக்கிடுமுருக. 14

கொள்ளிவாய்ப்பேயைக் குலைத்திடுமுருக
கள்ளிருள்முனியை நசித்திடுமுருக
துஷ்டதேவதையைத் துரத்திடுமுருக
அஷ்டமாசித்தியை அருள்செய்முருக
தலைவலியதனைத் தவிர்த்திடுமுருக
கலைவலியதனைக் கவிழ்த்திடுமுருக
மூலமதனை முறித்திடுமுருக
சூலையதனைச் சுழற்றிடுமுருக. 15

கண்ணோயதனை களைந்திடுமுருக
மண்ணோயதனை மறித்திடுமுருக
துன்மமதனைத் துலைத்திடுமுருக
சென்மவினையைத் திருப்பிடுமுருக
ஏறியவிஷத்தை யிறக்கிடுமுருக
சீறியமாவைச் சிதைத்திடுமுருக
பூக்கமழ்குஞ்சிமுற் புகலுமூறுப்பைக்
காக்கமுருக காக்கமுருக. 16

வாழிமுருக வாழிமுருக
வாழிமுருக வாழிமுருக
முருகமுருக முருகமுருக
முருகமுருக முருகமுருகனே.

கந்தர் கவசம் முற்றிற்று.

---

## சுப்பிரமணியர் விஞ்ஞை

---

சீர்மேவும்வாலை யபிராமிசூலி
திரிபுரைசங்கரி கௌரிமாரிவாமி
கார்மேவுமைட் சங்காரிதுர்க்கை
சாமுண்டிகங்காளி தந்தமைந்தன்
கார்மேவும் அத்திமுகன் ஒற்றைக்கொம்பன்
கருணைதிருநயனமிரு கமலபாதம்
பார்மேவும் அறுமுகவன் குறுமுனிக்குப்
பகர்சர்வ விஞ்ஞைக்குக் காப்பதாமே. 1

சிவ்வழலுமுருத்திரனு முருகன் முடியானான்
சேவலதுபுயமாகி மகரம்திறமானன்
நவ்வினியவிதிக்குமர னிட துப்புயமானன்
நற்சத்திவடிவேலன் சூரரையும்வென்றான்
மவ்வுசிவ்வொடுநத் வெனிந்திரியயெழுத்தை
மசிநசியெனச்செபித்து உருலட்சமாகில்
வெவ்வுணர்வார்போல விளையகலுமிதுதான்
வேல்முருகா சர்வசங்காரவிஞ்ஞை. 2

மேலானகும்பமுனி பெருகவிண்ணும்
வேல்முருகர் சர்வசங்காரவிஞ்ஞை
வாலாயமாகவொரு பிரம்பிற்பாச்சி
வலமிடந்தோள் சிரசிலுமுன் றட்சரத்தையூன்றி

காலாகவருவேக சூரரையும்வெல்லும்
கனிவுகொண்டு லக்ஷ முருசெபித்தபேர்க்கு
ஆலாலவிஷங்களுமே நாஸ்தியாகும்
அதனில் விஞ்சைச்சின்னம் வரலாறுகேளே. 3

கேளுமூன்றெழுத்துருக்கள் பிரம்பிடைக்கொண்டு
கெவனமுன்னிவிபூதிதரித் தெதிரேபார்க்கில்
வாளுருவிக்கொன் வருவார் முறிபட்டோடும்
மகாவிஞ்சைதன்னையுமே தகட்டிற்கீறி
நீலக்ஷம்உருசெபித்து பிரதிலணிவோர்க்கு
ரோகஉண்டையம்பு விலகியோடும்
நாளுலவுமிரவுபகல் சயனிக்கும்போது
ரகஸ்திரியட்சரத்தை முகத்திலொட்டே. 4

ஒட்டியது ஒன்றிடத்தில் கணுக்காணாது
ஓர்சர்ப்பந்தீண்டாபடுத் துறங்கிப்போகும்
முட்டுவயிற்றுதித்தகர்ப்பம் மரித்தாலென்னை
மூனையறுகால்மந்திரித்து சிரம்வயிற்றிற்பூச
அட்டபிள்ளைசாகாது வெளிப்படுஞ்சேய்
அதுவுமேசுகமாக பிறக்குந்தானே
தொட்டிகட்டிலெத்தனைபே ருடன்சென்றாலும்
சுண்டக்காயளவுகல் லோகிக்கேளே. 5

ஓதியேகல்உருமால் முடிந்துகொண்டு
ஊர்பயணம்போகும்போ தொருவருக்கும்
தீதுவிடசெந்துக்கள் மிதிபடாது
நினந்திரியாக்ஷரத்தை மினைவிலுன்னி
வாதிக்குச்சர்வ ஜனவசியமாகும்
வையமெலாந் தன்கைக்குளடங்கிநிற்கும்
சாதகமாய்கோடியுரு செபிக்கும்போது
தானிருக்குமூர்தனிலே விஷமண்டாதே. 6

அண்டாதுயேவல் பில்லிசூனியங்கள்
அணுகாதுநா வேறுங கண்ணேறுங்கூட
மண்டானபேர்களும் நல்வார்த்தைசொல்வார்
வரைந்துவரைந் தெந்திரத்தைச்சிரம்பூண்டோர்க்கு

பண்டானவினைராச பிளவைவீக்கம்
படுபருக்கள் சிரங்கு குஷ்டம்பெருவியாதிக்கே
விண்டானஎண்ணை ஜலம்விபூதிபிரம்பிரலே
வியாதியெல்லாமரண் மூன்றெழுத்தினாலே. 7

எழுத்தைக்கேள்மூன் றட்சர விஞ்ஞைபின்னும்
மியம்பவேகுருமுனிவ்ய சேர்க்கியேபார்
வழுத்தபர்வசங்கார திரியட்சரதந்த
மவுனமுன்னிலட்ச முருசெபித்திடுங்கால்
கழுத்துவாய்செவிகன்னம் நெஞ்சிகுய்யம்
கடி தடமிலிங்க் வங்கைகால்களோடு
தழுத்தசிகைசிரசில் கண்டுகண்டமாலை
சற்குருவைவினைந்து கொண்டுபிரம்பாலேநீலே. 8

நீவியேவிபூதியுஞ் சலங்தெளித்து
நிதமிருபோ துட் கொள்ளெட்டுகாளில்
பாவியர்க்குவாறலும் நாஸ்தியர்கும்
பழ்வினைக்கூறுறலும் நாஸ்தியாகும்
மாவலுவாம்சடா முனியும் பிரம்மராக்ஷதையும்
மந்திரவாதிகளுக்கு வணங்காப்பேயும்
மேவிசெந்துக்கிரகம் வேதாளக்கிரகம்
மிதவெச்சக்கிரகம் நவக்கிரகம்போமே. 9

கிரகசென்மாங்கிரகம் அகோரக்கிரகம்
கிளர்சந்யாசிக்கிரகம் கொல்மாலைக்கிரகம்
சர்வதுஷ்டகிரகங்கள் தொட்டிருந்தால்
தந்தமதுகிடைந்திருந்த லண்டருக்கு
வெருவிவிழித்திடுங்கண்ணை மெருட்டிப்பார்த்து
மேல்விழுந்தலறும் மெறுங்குறிபைக்கண்டு
மருவியமூவிசையுஞ்சலம் சிரசில்விட்டு
மந்திரநீரைப்பிரம்பால் உச்சியிலேதட்டே. 10

தட்டியே ஆயிரத்தெட் டுருசெபித்து
சங்காரவிபூதியின லெரியும்போது
சுட்டியுந்தீவட்டிகொண்டு கொளுத்தினற்போல
சேர்ந்துநடுநடுங் குபேழுபர்கிரன்போறேன்

விட்டிடைய வெகுமாளாய்க் கார்த்தேனிந்த
வேளையஞ்சமாக்கால் தீர்விரைந்துதரும்
திட்டமதாய்ச்சாப்பிட்டு போறேனென்று
சென்றதற்கு அடையாளம் செப்பக்கேளே. 11

செப்புகிறேன் சிதம்பர சக்கரத்தினாலே
தேகமெல்லாங்கட்டுண்டு திரங்குமையா
தப்புரைசொல்லேனிதோ போறேனீசன்
றன்மேலே ஆணையிட்டுப் போறேனென்னும்
அப்படியேபோனதற்கு சோதனைகள்கேளே
அங்கிருந்தமரத்தினுட கொம்பினூடும்
ஒப்பரியபெரும்பாறை அம்மிதாக்கி
உளராமல்வெருண்டு பயந்தோடுந்தானே. 12

ஓடுமோர்முயல்கண்டன் பிரமகண்ட
னுடற்குழியாம் குமாரகண்டன் மகரண்டன்
நீடுமொருகருமத்தால் வரும்வியாதிக்கே
நிதம்பஞ்சகவ்வியம் கோமூத்திரத்தினாலும்
கூடுமொரு மகரா மாமயிரமுஞ்செய்து
குறையாமல்நிதமுமரை மண்டலங்கொடுத்தால்
நாடுமொருராப்பகலும் வலிப்புக்கெல்லாம்
ராசனாமுயல்கண்டன் வலியுந்தானே. 13

வலிதாகப்போகாட்டா லீசன்கோலம்
மலத்திலுன்னிவிரித்த சடைவீரப்பல்லும்
நலிவானமகர குண்டலமுமுன்று
நயனமுருரோமங்கள் அளப்பிரம்பால்
புலியாடையுடுத்திமான் மழுகரத்திலேந்திப்
பூங்கொன்றை மாலையது புனைந்திருக்க
கெவியானபிரமனென்று சிந்தையெண்ணி
கேசரிமேல்மூலத்தை வைத்துத்தாக்கே. 14

சுப்பிரமணியர் விஞ்ஞை முற்றிற்று.

## சுப்பிரமணியர் கவசம்

ஓம் சிவசிவாயா, சண்முகாயா, மூவிருமுகமும், மூவிரு முடியும், ஆறிருகாதும், பன்னிருதோளும், மெய்ப்புரி மார்பும், முப்புரிநூலும், சொட்டையும், சுருதியும், உபயபாதமும், அபய வஸ்தமும், புண்டரீகம்போல மலர்ந்த தண்டையும், ஏறியமயிலும், சீறிய வரவமும், வீரியகாலத்தில் வேலாயுதமும், கூறிய கோழிக்கொடியொருகரமும், கனம்பெறவணிந்த கடப்பமாலையும், பவழவாயும், பன்னிருநயனமும், அடைவுடனணிந்த ஆயுதவகையும், பரிசையும், வாளும், கத்தியும், சூலமும், தண்டுடன் தடியும், ஆயிரமாதித்த திரண்டுருண்ட மேனியும், சர்வாபரணமுந்தரித்தவழகும், வாணவர்தேவியை மருவியபுயமும், கான்க வள்ளியைக் கட்டிபகரமும், ஆயிரங் கணங்கள் ஆயுதமெடுப்ப ஆயிரங்கண்ணங்கள் அடிதொழுதேற்ற சூரரைக்கடிந்து மேருவைப் பிளந்தாய், அமராபதி வாழ் சரவணப் பிரதாபா, சண்முகராயா, வடிவுள குமாரா மாயோன் மருகா, மூவரதிபற்குமுதலாய் முளைத்த தேவாதிபனே, சேவகாசரணம், முத்தாசரணம், மூர்த்திசரணம், கர்த்தாசரணம், கந்தனே சரணம், எந்தன் மனதில் என வேண்டியதும், தந்து ரக்ஷிப்பாய் சரவணபவனே, சரணம்சரணம், சுவாமி சரணம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ச | ர | ஹ | ண | ப | வ |
| ர | ஹ | ண | ப | வ | ச |
| ஹ | ண | ப | வ | ச | ர |
| ண | ப | வ | ச | ர | ஹ |
| ப | வ | ச | ர | ஹ | ண |
| வ | ச | ர | ஹ | ண | ப |

## மூலமந்திரம்

ஓம் அய்யும் கிலியும் சவ்வும் சரஹணபவ, சயஜொளிபவ, திரிபுரபவ, திகழொளிபவ, பரிபுரபவ, பவஜொளிபவ, அரிதிரு

மருகா, ஓம் குருகுரு பரமகுரு ஓம்குமாரா ரணக்களம் உரு 1200—ஜெபிக்க சித்தியாம்.

இதன் பலன் :—சித்தபூஜை விபூதி பிடிக்கவும், காத்து சோங்கலுக்கு மந்திரிக்கவும், பிசாசு ஓட்டவும், தரையில் சக்கிரம் போடவும், தோஷங்களுக்குத் தண்ணீரோதிடவும், குளிசங்கட்டவும் சுகுணப்படும்.

## சுப்பிரமணியர் உடல்கட்டு மந்திரம்

ஹரிஓம் சரவணபவா, சண்முகா, சத்துருசங்கார ரூபனு, இசண்டமா சண்முக வேலாயுதமயா, அறுமுகவா, வுமையவள் புத்திரா, கோலரகலா. அமரர்சிகாமணி, ஆனந்தரூபா, குறமகள் மணவாளா, குக்குபத்துவஜா, குங்குமவருணு, கோடி சூர்ய்ப்பிரகாசா, பிரபலகுமாரா, பிரீதிகா, ஆறுசபை காரணம், பில்லி, பாம்புகள், சூனியப் பிசாசுகள், பிதறியோட, பாதம் உனது தலைமுதலுடல் முப்பத்திரண்டும் உரும்மங்கார்க்க, உனது வேலும் சுற்றிக்கார்க்க, மயிலினிவண்ணு முருகா கார்க்க. உச்சி உருத்திரன் கார்க்க, நெற்றி நீலகண்டன் கார்க்க, கண்ணை கணபதி கார்க்க, மூக்கை முக்கண்ணர் கார்க்க, வாயை வாணி கார்க்க, பல்லை பகவதி கார்க்க நாக்கை நாரர்யணன் கார்க்க, உள்நாக்கை ஊர்காளி கார்க்க, காது காளி கர்ர்க்க, கன்னங் காலன் கார்க்க, கழுத்தை கருடன் கார்க்க, தோலை துர்க்கி கார்க்க, மார்பை மகாதேவர் கார்க்க, முரலை முதல்வர் கார்க்க, வயர் வயரவர் கார்க்க, தொப்புள் துந்தமாதேவி கார்க்க ஏரடுவாசல் கருடவாசல் ஈஸ்வரி கார்க்க தொடை, துவ்ார்பாலகர் கார்க்க, முழங்கால் முதல்வர் கார்க்க, கணுக்கால் கண்ணன் கார்க்க, பாதம் பரஞ்சோதி கார்க்க, இறுதியும் இறைவன் கார்க்க, நங், துகாளி மதுரை கார்க்க, ஐயமென்னும் அரிகாவுத்திரன் கார்க்க, தென்திசை வீரபத்திரன் கார்க்க, வடதிசை வீரமாங்காளி கார்க்க, மேல்திசை வைரவர் கார்க்க, கீழ்திசை சதாசிவன் கார்க்க, எட்டுகாத திசையும், பதினாறு கோணமும், முன் சகலகோடி பூதப்பிரேத பிசாசு பிரமராக்ஷசுகளெல்லாம் பறந்தோடிப் போகச்சுவாகா.

இவ்வுடல் கட்டை தனக்கு சுட்டிடில் ஒருதரம்ஓதி இடத் தோளிலிருந்து வலதுதோள்வரையில் வாயினலூதிக்கொள்ள

வும், பிறருக்கு இதை ஜெபித்து அந்தந்த அவயவங்களமீது விபூதியைப் போட்டுவரவும், உடல் கட்டாகும், யாதொரு பயமும் நேரிடாது. இதை எல்லாப் பிரயோகங்களுக்கு முன்னந் தன்னை கட்டிக்கொண்டே அக்கிரியைக்ளுஞ் செய்யவும் நன்மை. பேய் பிடித்தவனை ஆட்டிப் படுக்க வைக்கையில் இதை கட்டியே படுக்கவைக்கவும் மறுபடியும் அக்கிரகங்கள் யாதொரு தொந்தரையுஞ் செய்யாதிருக்கும்.

## கட்டிக்கு மந்திரிக்க ஷீ மந்திரம்

ஓம் பாலசுப்பிரமணியா, வைரவநாதா, உன் பாதம் வந்தடி பணிந்தேன் சூர சூலத்தாலே சூரரை வதைத்த சூர் சங்காரா, காலகாலா, காலனையுதைத்த காலகண்டா, கண்டமாலை, கருணை மூலம் தொடை வாழை அக்குள் சிலந்தி, அரையாப்பு, முலைச்சிலந்தி, பக்கப்பிளவை, எரிப்பிளவை, நட்புச் சிலந்தி, கட்டுவிட்டு கரைகரைந்து ஆலகால விஷங் கக்கினாற் போலே அந்நீர்வற்றி, செந்நீர்வற்றி, வீக்கம்வற்றி, விதிர்ப்பு வற்றி, உலர்ந்து பலர்ந்து கரிந்து பொரிந்து போகச்சுவாகா.

ஓராங்கடல், இரண்டாங்கடல், மூன்றுங்கடல், நான்காங்கடல், ஐந்தாங்கடல், ஆறுங்கடல், ஏழாங்கடல், எட்டாங் கடல், ஒன்பதாங்கடல், பத்தாங்கடல், பத்தாங் கடலுக்கப்பால் பாற்கடல், பாற்கடலுக்கப்பால் ஆலாவிருக்ஷம். ஆலாவிருக்ஷத்தின் கீழே புத்தடிநாகன், புத்தடிநாகன் வயிற்றிற் பிறந்த நரிமூஞ்சிச்சிலந்தி, நாய்மூஞ்சிச்சிலந்தி, விலக்காட்டுச் சிலந்தி, விலக்கொடுசிலந்தி, நாலாயிரத்தி நானூற்றி நாற்பத்தெட்டுச் சிலந்தியும் சுப்பிரமணியர் சூலத்தினாலே குத்திபடுயிருத்திப் படுசுவாகா உரு—4008 ஜெபிக்கவும்.

இம்மந்திரம் செபித்து 9-விசை யோதி வேப்பிலையினாலாவது, விபூதியினாலாவது அல்லது மண்ணுங்கட்டியினாலாவது மந்திரித்து உடையாக் கட்டிகள் கரையாக் கட்டிகள்மேல் விபூதிதூவி வாயினாலூதிவிடவும். அப்பருவுகள் உடைந்தாகிலும் அல்லது கரைந்தாகிலும், அழுந்தியாகிலும் போய்விடும்.

இதை முதலிற் பூசைவைத்துப் பிறகு சாம்பிராணிவற்றிக் கொளுத்தி வைத்துக்கொண்டும் உருபோட்டு வரவும். இதை காலை மாலை இரண்டு மூன்றுநாள் மந்திரிக்கவும் நன்மையாம்.

## தேள் மந்திரம்

ஓம் வாஞ்சக்காலும், வடிந்த மூக்கும், வருகணப்பிள்ளையார் தண்டையுஞ் சதங்கையும் தாவட்டத்தில் வீற்றிருக்கும் கருமலைக்கும் செம்மலைக்கும் அப்புறத்திலே கன்னிபுத்திலே கருந்தேளும் செந்தேளும் கலந்து பறந்திருக்கும் ஒண்ணும் தேளும் ஒரு மரத்திலேற ஒண்ணேறத் தேளிறங்க ஓம் காளியிறங்கிவா, ஆகாசவாணி யிறங்கிவா, உன்னையும் என்னையும் படைத்த பிரம்மா வாணை யிறங்கிவா, பாசிபடர்ந்த பன்னீராயிர மந்திரத்தேளே படுபடு பராபர பாப்பார வெள்ளாட்டித் தேனே படுபடு சுவாகா, உருவு 1008 செபிக்கவும் சித்தியாம்.

இம்மந்திரம் ஜெபித்து மூன்று துடைப்பம் அல்லது ஒரு துடைப்பக்கட்டைக்கொண்டு மந்திரித்துக்கொண்டே இறக்கி வரவும் விஷம் ஏறியது இறங்கும் அப்பப்போது கேட்டு அடிக்கடி வாயிற் கொண்டுவந்து விடவும்.

## சுளுக்கு மந்திரம்

ஓம் அண்டமுருக, ஆகாசமுருக, சூலமுருக, சுடுகாடு முருக, இங்கே சுளுக்கினுள் ருத்திரன் விடு விடு நடு வீடு போகச் சுவாகா உருவு 1008 செபிக்கவும் சித்தியாம்.

இம்மந்திர மோதிக்கொண்ட மண்ணுங் கட்டியை வலது கையில் பிமுட்டி சுளுக்கின இடத்தில் உதிரிமண்ணை விடவும். கடைசியில் கையினால் மூன்றுவிசை தடவி கீழிறக்கி விடவும். நிவர்த்தியாகிடும் இன்னமிதனை பலவிதமா மந்திரிப்பதுண்டு.

## பிரசவத்திற்கு எண்ணெய் ஓதும் மந்திரம்

இந்திரன் விழுதப்புழுதி எமனிரைத்த எள்ளு மந்திரக் குடத்து எண்ணெய், மாசாத்துப் பிள்ளையார் தந்தவெண்ணெய், காளி தந்தவெண்ணெய் காளி தூதர் தந்த எண்ணெய் இவ்வெண்ணெயைக்கொண்டு மார்பில் தடவ குளிரிற்க, மாக்குடலும் பிள்ளையும் குத்திக்கிளறிக் கால் கடல் வந்து விழச் சுவாகா. உரு 1008 செபிக்கச் சித்தியாம் இதை கிராணத்திற் செபிக்க நன்மை.

மாதர்கள் பிள்ளை பெறமாட்டாமல் பிரசவ வேதனைப் படுகையில் ஓர் செப்புக்கிண்ணத்தில் கொஞ்சம் விளக்கெண்ணெய்விட்டு அதில் தான் அறுகம் புல்லினைப் பிடித்து

அவ்வெண்ணையிற் போட்டு சுழட்டிக்கொண்டே மந்திரித்து வந்து மூன்றுவிசை வாயினுலூதியும் கடைசியில் அவ்வறுகம் புல்லை மேலே தூக்கிப் பார்க்க எண்ணை தெளிவா யிறங்குமாகில் ஆணென்றும், குழப்பமாயிறங்குமாகில் பெண்ணென்றும் அறுகம்புல்முனை இருபிளவாய் பிரியுமாகில் இரட்டைப்பிள்ளையென்றும் சொல்லவும் சரியாயிருக்கும். அது கலைந்து சிதறியிருக்கில் பிழைக்காதெனச் சொல்லவும்.

## பாம்பு மந்திரம்

ஹரி ஓம் ஓங்காளா, அஞ்சலா, இலாவா, சேஷா, முந்திரதீரோ, பக்தபஜாரே, விஜாரே மூலாக்கிரே, சரீர குருவுக்கு ஜகத்திமரே, பகத்தி புரோமந்திர மைசூர வாசா, உரு 1008-செபிக்கச் சித்தியாம்.



பாம்பு கடித்தவனை மல்லாக்கப் படுக்கவைத்துத் தான் நேத்திரத்தில் ஷியான் முகத்திலிருந்து இடுப்புவரையில் இவ்வெந்திர சூலம்போட்டு அவனது நெற்றியில் ந, நெஞ்சினில் சி, உந்தியில் ம, எழுதி லட்சயம் வைத்து வேப்பிலைக் கொத்தைத் தன் கையிற்பிடித்து உச்சியிலிருந்து மந்திரித்துக்கொண்டே இறக்கி வரவும் விஷமிறங்கும். அப்போது ஒரு மிளகாயைத் தின்னக்கொடுத்தால் அது காரமில்லாதிருக்கில் விஷமிறங்கவில்லை யென்றும், காரமாயிருக்கில் விஷமிறங்கி விட்டதென்றும் நிறுத்திவிடவும். அதன்பின் பச்சரிசி பச்சைபயர் கஞ்சி வார்க்கவும்.

## பாம்பு தடைகட்டும் மந்திரம்

கீரெரிய, நிலமெரிய, நில்வாழைக் குறுத்தெரிய, பாம் பெரிய, படபெரிய பாரான முப்புரமெரிய, சங்கெரிய, சங்

கெரிய, சக்கரங் கிரன்றிய, கொடி கொடி தா(
கொல்லங் கொண்டு வந்தாலும், அலகு திறவாதே:
ஓகெட ஓம்படு சுவாகா உரு 1008-செபிக்க சித்தியா

## பாம்பு தடைகட்ட

வட்டமிட்டசூரியனே, மலையெழுந்தபகவானே, கட்
மிருகமெல்லாம் கட்டிவிட்டேன் விட்டேன்; ஓம் நமசிவ

நல்ல பாம்பைத் தடைகட்ட வேண்டுமாகில் ஒ(
டிகை மண்ணெடுத்துமுன் மந்திரத்தால் செபித்து
மேற்போட அச்சர்ப்பம் ஓடாது ஒளியாது ஒடுங்கி
நின்றுவிடும். இரையுமெடுக்காது அப்பாலுஞ் செல்லா

அந்த கட்டை யவிழ்க்கவேண்டுமாகில், மறுபடியு
சிட்டிகைமண் எடுத்து பின் மந்திரமோதி அதின்மேற்
அச்சர்பமானது முன்போல தனதிடம்போய் சேர்ந்துவிடு(

## பக்ஷி தோஷத்துக்கு

ஒருகடல், இருகடல், முக்கடல் நாற்கடல், ஐங்
அறுகடல், எழுகடல், எண்கடல், ஒன்பதாங்கடல், ப
கடல், பத்தாங் கடலுக்கப்பால் பால்கடல், பால்கடலு
பால் ஆலவிருக்ஷம் ஆலவிருக்ஷத்தின்கீழ் மணிப்பெருந்
வயிற்றில் ஆணும் பெண்ணும் நால்பக்ஷிகள் பிறந்து
திக்குளு முண்டாக்கவேண்டி பரமேஸ்வரன் பரமேஸ்
பாதத்திலே போய்விழ நான் மந்திரிக்க, முட்டுதோ
குளிதோஷம், பக்ஷிதோஷம், பறவைதோஷம் விட்டோ
போகச் சுவாகா, ஓம் காளி ஓம்பிடாரி ஓம் நமசிவாய சுவ
உரு 1008-செபிக்கச் சித்தியாம்.

ஒரு சொம்பில் சுத்தியாய் ஜலம்கொண்டுவர, அதில் வே
பிலை ஒன்பது இணுக்கு அந்த ஜலத்திற் றேய்த்து சுழட்
கொண்டேயிருந்து ஒன்பதுதரஞ் செபித்து அக்குழந்தைய
முகத்திற் றெளித்து வாயினுலூதவும், இப்படி மூன்று வி
தெளிக்கவும், மூன்றுநாள் காலையில் மந்திரிக்க பட்சிதோஷ
பறவைதோஷம், முட்டுதோஷம், குளிதோஷம் முதலிய யாவ
தீரும். பின்னும் கழிப்பு செய்தாலுஞ் ... பயலரம்.

## சகல குருவி தோஷத்திற்கு மந்திரம்

ஓம் பொன்னொரு கலசம், பூவொரு கலசம் பொன்னு
நீறும்பொருந்திய கலசம், இந்திரனடியநீர், இறைவனடியநீ

சந்திரனுடையநீர், சதாசிவனுடையநீர், மாதிருடையநீர், னுடையநீர், அம்மையாடியநீர், ஆகாசப்பெண்களாடியநீர், மகாதேவகையாடியநீர் துர்க்கா பரமேஸ்வரி யாடியநீர், முப்பத்து முக்கோடி தேவர்களாடியநீர் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளாடிய நீர், அந்நீரு மிந்நீருங் கொண்டோதினேன் குருவித்தோஷம் தொக்குத்தோஷம், முட்டுத்தோஷம், குளித்தோஷம் எனப்பட்ட 448-தோஷங்களும் பொரிபொரிஞ்சி, கரிகரிஞ்சிபோகச் சுவாகா, உரு 1008-செபிக்கவும் சகல தோஷங்களும் போம்.

இம்மந்திரத்தை முன்போல் வேப்பிலை நீரால் மந்திரித்து அக்குழந்தைகளின் முகத்தில் மூன்றுவிசை மூன்று நாட்களில் ஓதி யிரைத்து நாலாவது விசை அச்சலத்தால் அதின் முகத்தைத் துடைக்கவும்.

## நாய் வாய்க்கட்டு மந்திரம்

ஓம் வைரவா, ஆகாச வைரவா, இந்திர வைரவா, இமையோர் அலைகுருர், எண்மனந்தியங்குது, ஏதுக்குக்குலைக்குறாய், அப்படிக்குலைத்தால் அரனாணை ஓம் டட்ட, சுவாகா, உரு 1008-செபிக்க சித்தியாம்.

வாய்கட்டறுக்க வீட்டமிட்ட பகவானே, மலையெழுந்த மயேசுரனே, கட்டுப்பட்ட மிருகமெல்லாங் கட்டுவிட்டேன் விட்டேன் ஓம் நமசிவாயா என்று முன் மந்திரத்தால் ஓர் சிட்டிகை மண்ணெடுத்து மந்திரித்து குலைத்துக் கடிக்கவரும் நாயின் முகத்தின்மேற் போட, நாய் குலைக்காது கடிக்காது ஒடுங்கி ஓடிப்போய்விடும். இரையெடுக்காது குலைக்காது எட்டுநாளைக் குன்றிவிடும். இதற்குள் அந்த வாய்க்கட்டற, மஞ்சள்நீர் அந்த நாய் முகத்திற்றெளித்து பின் மந்திரஞ் செபித்து அதின் முகத்திலூதி கையினால் முகத்திலிருந்து தடவி யிறக்கவும் சுகுணமாய்விடும்.

## பட்சிமுதல் மிருகக்கட்டு

ஓம் பகவதி ஓம் பைரவி என்னை யெதிர்த்துப் பகைத்து வந்தத்தையுங் கட்டுகட்டு தடுகென பட்சியைக்கட்டு, மிருகத்தைக்கட்டு, ஓம் காளி, ஓம் ருத்திரி, ஓங்காரி ஆங்காரி, அடங்கலுங் கட்டினேன், சத்துருவைக் கட்டினேன், சபையைக் கட்டு எதிரியைக்கட்டு, எங்குமேகட்டு சிங்வங் லங்லங் ஸ்ரீம் ஓம் சிவாயா நமசிவாய நமஃ உரு 116-செபித்திட சித்தியாம்.

தான் எதையுங் கட்டுகையில் தனது உள்ளங்கையில் விபூதியைப் பரப்பி, அடியில்வரும் சக்கரமெழுதி மந்திரம் 108-ஜெபித்து தாயித்தை செய்து வைத்துக்கொள்ளவும். சகல காரியமுஞ் ஜெயமாம். இன்னும் பில்லி பிசாசு துஷ்ட வினை விலகி யாவும் சுகுணமாம்.

இதற்குச் சக்கரம்




ஷ்டி கட்டவிழக்க ஓம் சரஹணபவாய வென்று, சத்துரு கட்டு சபை கட்டு எங்குள்ள கட்டும் விட்டேன். என் குரு சுவாமி போசொல்லி ஏகமாயக் கட்டவிழ்த்துவிட்டேன். ஓம் ஹரி ஓம் நமசிவாய ஓம் சுவாகா என்று ஜெபித்து திருநீர்போட ாவுந்தீரும்.

## உடல்கட்டு மந்திரம்

ஓம் நமசிவாயவென்று உடலுமுயிரும் ஒக்கக் கட்டினேன். ஓம் பரமசிவாவென்று உச்சியும் உள்ளங்காலையும் கட்டினேன், ஓம் பைரவாயாவென்று பஞ்சபூதத்தையுங் கட்டினேன்; ஓம் அஷ்டபரியென்று எட்டுதிக்கும் பதினாறு கோணமும் கட்டினேன், ஓம் சரஹணபவாவென்று சர்வமுங் காக்க கட்டினேன்; என்கட்டு என் குருசுவாமிகட்டு என்கட்டு முன்பின்னாக நிற்கக்கட்டினேன், சுவாகா. உரு 1008-ஜெபிக்கச் சித்தியாம்.

## கட்டவிழ்க்கு மந்திரம்

ஓம் சிவாயநம ஸ்ரீ ஓம் குருவேநம சர்வமுங்கட்டு விட்டேன் என்றும் இதை பூரணை அமாவாசை ராத்திரி தலை

செப்பியபடிக்கு செய்யக் கேட்டுக்கொண்டு தேங்காயைப் பிர யோகிக்க போனசொத்தையும் ஆளையும்கொண்டுவந்துவிடும்.

இதற்கு அடியிலுள்ள கிண்ணியின் சக்கரந்தான் உபயோகிக்கவும், இரண்டிற்கும் சக்கரம் ஒன்றுதான்.

## களவுபிடிக்க கிண்ணி மந்திரம்

ஓம் சங்கும், சக்கரமும் சோரனையும், ஆளையும் அழைத்து வாடியம்மா அழைத்துவாடி, அநுமந்தருடைய பாதமானை அழைத்து வாடியம்மா அழைத்துவாடி, வீரபத்திரருடைய பாதமானை அழைத்துவாடியம்மா அழைத்துவாடி, ஓம் அஞ் சஞ்தேவி ஐவிதுருச்ச ஆம்பஞ்சளி சுவாகா, உரு, லக்ஷம்.



ஒரு கிண்ணியைச் சுத்தியாய்த் துலக்கி கோமயம் பால் மஞ்சளால் கழுவி அதன் நடுவி லிச்சக்கரமெழுதி நாலுபக்க மும் மஞ்சள் குங்குமமிட்டு பால்பொங்கல் வைத்து பால் பழம் தேங்காய் தூபதீபம் நைவேத்தியம்வைத்து அக் கிண்ணியைப்பூதக்கண்கால் இரண்டு பெருவிரலால் இரண்டு பக்கம் அமுத்திபிருக்க உரு ஜெபித்துவர, அக்கிண்ணி நகர்ந்து கொண்டுபோய் திருடனைக்காட்டும், அதற்கு முன் சந்தேகமானவர்களை வரிசையாய் நிற்கவைத்திருக்கவும். முன் தேங்காய் மந்தரத்திற்கு இச்சக்கரமே சேர்க்கவும்.

## விஷங்கட்கு. லிங்கங்கட்ட

ஹரி ஓம் பெருமாள்கோவில் புறப்பாடாகிவரும் கோல வாசி மின்னைமின்னை மூன்றுவாா் வரிந்தேன். பின்னை மூன்று

